# பொன்விழாப் போது

தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி
சென்னை–600 059

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title | : **Ponvizha Pothu** |
| Language | : Tamil |
| Edition | : First, 1997 |
| Editor | : Faculty of Tamil Department<br>Madras Christian College<br>Chennai-600 0059. |
| Copyright | : Department of Tamil<br>Madras Christian College<br>Chennai-600 0059. |
| Size | : Demy Octavo |
| Printing Points | :10 Point |
| Pages | : ix + 103 |
| Typesetters<br>&<br>Printers | : Vitra Computers<br>11, Redhills Road<br>Pudhur, Chennai- 600 053 |
| Price | : Rs.40. |

# பொருளடக்கம்

# வாழ்த்துரை

சென்னைக் கிறித்தவக் கல்லூரி தொடங்கிய காலத்திலிருந்தே இளங்கலை, இளம் அறிவியல் மாணவர்கள் தமிழை மொழிப் பாடமாகக் கற்று வருகின்றனர். அக்காலங்களில் பல மாணவர்கள் மறைமலை அடிகள், பரிதிமாற் கலைஞர், சற்குணர் போன்ற சான்றோர்களிடம் கல்வி பயின்றுள்ளனர். ஆனால் இன்று மொழிப்பாடம் எனும் நிலையுடன் நின்றுவிடாமல், இளங்கலை முதுகலை, ஆய்வியல் ஆகிய வகுப்புக்களைக் கொண்டு தமிழ்த்துறை தமிழ்த் தொண்டாற்றி வருகின்றது.

தமிழ்த்துறையிலுள்ள முனைவர் பட்டம் பெற்ற எட்டு விரிவுரையாளர்கள் ஆய்வியல் மாணவர்களுக்கு மேற்பார்வை யாளர்களாகத் தொண்டுபுரிந்து வருகின்றனர். இவர்களின் வழி காட்டுதலினால் பல மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளார்கள். பல மாணவர்களுக்கு முனைவர் பட்டத்திற்கும் வழிகாட்டி வருகிறார்கள். பல விரிவுரையாளர்கள் ஆண்டுதோறும் பல புத்தகங்களை வெளியிட்டும் வருகின்றனர்.

இவ்வாறாகத் தமிழ்த்துறை ஆசிரியர்கள் இலக்கியத்தையும் மொழியையும் கற்பிப்பது மட்டுமன்றி, புத்தகங்கள் பல வெளியிட்டும் ஆய்வு நடத்தியும், ஆய்வுக்கட்டுரைகளை இதழ்களில் வெளியிட்டும், கருத்தரங்கங்கள் பல நடத்தியும் தமிழுக்கென்று கல்லூரியில் தனி இடத்தைப் பெற்றுத் தந்துள்ளனர்.

இவ்வாறு வெற்றிப்பாதையில் நடைபோட்டுவரும் தமிழ்த் துறையானது, தமிழ் மாணவர்களுக்கென்று பாடப்புத்தகங்களையும் வெளியிட்டு வருகின்றது. இந்த வரிசையில் தற்போது ‘பொன்விழாப் போது’ எனும் நூலை இளங்கலை, இளம் அறிவியல் மாணவர்களுக்குப் பாடப்புத்தகமாக வெளியிடுவதைக் கல்லூரி வரவேற்கின்றது.

இக் கல்லூரியானது சுற்றுப்புறச் சூழலைப் போற்றுவதில் மிகவும் கவனம் செலுத்தி வருவது யாவரும் அறிந்த ஒன்று. இந்த விழிப்புணர்வை இந்நூலின் இரண்டாவது கட்டுரை கொண்டிருப்பது போற்றத்தக்கது. பிற கட்டுரைகள் கலை இலக்கியப் பண்பாட்டுக்

கருத்தை வலியூட்டும் வகையில் அமைந்திருப்பது சிறப்புடைய அம்சமாகும்.

இந்நூலைக் கிறித்தவக் கல்லூரியின் மாணவர்கள் நன் முறையில் கற்றுப் பயனடைவார்கள் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. இந்த நற்பணி மேலும் தொடர வாழ்த்துகிறேன்.

20.11.97
சென்னை—59

அன்புடன்
**ம. கிளாட்ஸ்டன்**
முதல்வர்
சென்னைக் கிறித்தவக் கல்லூரி

# பதிப்புரை

'பொன்விழாப் போது' எனும் தமிழ் மகரந்தங்கள் உங்கள் கரங்களில் தவழுவதற்குக் காரணமாக அமைந்தவர்கள், பாடத்திட்டக் குழுவில் அங்கம் வகிக்கும் பாராட்டிற்குரிய பேராசிரியப் பெருமக் களாவர். இரண்டாமாண்டு இளங்கலை—இளமறிவியல் வகுப்புகளுக்கு வைக்கப்படும் உரைநடை நூலைத் தமிழ்த்துறையே தொகுத்துக் கொள்ளலாம் என்ற உரிமையை வழங்கியது, பாடத்திட்டக்குழு. அவ்வுரிமையை வழங்கியபாடத்திட்டக் குழுவையும், அதனை அங்கீகரித்த கலைக்குழுவையும் நன்றியோடு நினைத்துப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளது, தமிழ்த்துறை.

தமிழ்த்துறை எடுக்கின்ற எந்த முயற்சிக்கும் திறந்த மனத்தோடு ஆதரவு தந்து பாராட்டுவதோடு, இந்நூலுக்குரிய வாழ்த்து ரையையும் வழங்கியிருக்கின்ற கல்லூரி முதல்வர் முனைவர் எம். கிளாட்சன் அவர்கட்கு நெஞ்சு நிறைந்த நன்றி.

பல்வேறு பணிகளுக்கிடையில், மாணாக்கர்கள் நலத்தை மட்டும் கருத்திற் கொண்டு, குறுகிய காலத்தில் எழுத்தோவியங்களைத் தீட்டித் தந்த தமிழ்த்துறை ஆசிரியப் பெருமக்களுக்கு, இதயம் நிறைந்த நன்றியையும் வாழ்த்தையும் உரித்தாக்குகிறேன். தங்குதடையின்றிப் புதுவெள்ளம் புறப்பட்டு வருகின்றது. அதில் நுரையை விலக்கி நனைந்து, நினைந்து நீராடவேண்டிய பொறுப்பு மாணாக்கர்களுக்கு உண்டு.

தனித்தனி மொட்டுக்களாக அரும்பிய கட்டுரைகளை மாலையாகத் தொடுத்து, செம்மையாக அச்சிட்டுத் தந்த விட்ரா கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தாருக்கும் மணமார்ந்த நன்றி!

வெளியீட்டுத் துறையில் அடியெடுத்து வைத்திருக்கின்ற தமிழ்த்துறை, மேலும் மேலும் அப்பாதையில் வீறுநடை போடவேண்டுமென்பது, என் விருப்பம்.

இவ்வண்

20.11.97 — தி.இராசகோபாலன்

சென்னை—59 — தமிழ்த்துறைத் தலைவர்

# படைத்தவர்கள் பற்றி..........

## தி.ரா.செல்வராசன்

*கலித்தொகையில் எம்.லிட் பட்டமும், மூவர் தேவாரத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர். சங்க இலக்கியத்திலிருந்து தற்கால இலக்கியம் வரை ஆழமாகவும் அகலமாகவும் கற்றவர். தற்பொழுது துறையில் விருந்து நிலைப் பேராசிரியர்.*

## தி. இராசகோபாலன்

*துறைத்தலைவர். 'வரலாற்று நாவல்களில் வரலாற்றுச் செய்திகள்' எனும் தலைப்பில் முனைவர் பட்டம். மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்று; சில நேரங்களில் பருவம் தவறி, எழுத்து மண்ணிலும் இந்த மழை பொழியும்.*

## மோசசு மைக்கேல் பாரடே

*அண்மையில் அமெரிக்கா சென்று திரும்பிய கவிஞர். தஞ்சை வேதநாயகசாஸ்திரியார் படைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 'சித்தர் பாடல்களும் விவிலியமும்' என்னும் பொருளில் முனைவர் பட்டமும் பெற்றவர். கிறித்தவ இலக்கியங்களில் ஆழங்கால் பட்டவர்.*

## கே.கே.சுந்தர சோபிதராஜ்

*'தலமரங்கள்' என்னும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். தமிழில் தாவரங்கள் குறித்து நூல்கள் வெளியிட்டுள்ளார். திருக்கோயில் வரலாறுகளைத் தொடர்ந்து ஆய்ந்து வருபவர்.*

## கு.இராசேந்திரன்

*கம்பராமாயணத்தில் அணிநலம் எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். பாவாணர் மரபில் வேர்ச்சொல் ஆய்வில் வேரூன்றியவர். 'கால்', 'அடி', 'தாள்—சொல் வரலாறு', 'சொல்வழிப் புதைபொருள்' 'உலகம் பரவிய தமிழின் வேர்—கல்' ஆகிய ஆய்வு*

நூல்களின் ஆசிரியர். 'உயிர்க் கதறல்' எனும் பாத்தொகுதியையும் வெளியிட்டுள்ளார்.

### யோ.ஞான சந்திர ஜாண்சன்

'நீல பத்மநாபன் நாவல்களில் பாத்திரப்படைப்பு' எனும் தலைப்பிற்காக முனைவர் பட்டம் பெற்றவர். ஆய்வு நெறிமுறைகள்— புதின இலக்கியங்களில் புத்தொளி பாய்ச்சி வருபவர். அருகிய வழக்காய் உள்ள கிறித்தவக் கீர்த்தனைகளைத் தேடிக் காண்பதில் தனி ஆர்வம் கொண்டவர். கிறித்தவ இலக்கிய ஆய்வில் மிகவும் தோய்வு உடையவர்.

### சா. பாலுசாமி

ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காகத் திருவருட்பாவையும் முனைவர் பட்டத்திற்காக நாயக்கர்கால கலைக் கோட்பாடுகளையும் தேர்ந்தெடுத்தவர். நவீன கலை—இலக்கியம் ஆகிய துறைகளை ஆய்ந்து வருபவர். வெள்ளிக்கிழமை தோறும் செஞ்சந்தன மரத்தடியில் நிகழும் வனம் கவியரங்கில் முக்கிய பங்கேற்கிறார். 'மாரிக்கால இரவுகள்' இவரது படைப்பு.

### ப. டேவிட் பிரபாகர்

ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக 'கருத்தாடல் நோக்கில் அறிவியல்' எனும் தலைப்பையும் முனைவர் பட்டத்திற்காகத் தமிழாய்வில் கணினி எனும் தலைப்பையும் தெரிவு செய்தவர். தமிழில் அறிவியல் பாடமாக்கம், கிறித்தவக் கீர்த்தனைச் சொற்களஞ்சியம்' என்பன இவரது படைப்புகள். தமிழர் எதிர்காலவியல் நூலின் பதிப்பாசிரியர். மொழியியல் துறையிலும் முதுகலைப் பட்டம் பெற்றவர்.

### ச. சவரிமுத்து

'கருத்துப் புலப்பாட்டில் கதைப் பாடல்கள்' எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். கல்வியியல் மற்றும் தகவல் தொடர்புத் துறைகளில் முதுகலைப் பட்டம் பெற்றவர். நாட்டுப்புறவியலில் தனி நாட்டம் கொண்டவர்.

## பு. ஜார்ஜ்

'பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் பதிப்புப்பணி' எனும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். நாட்டார் வழக்காற்றியல், நவீன கலை இலக்கியங்கள் ஆகிய துறைகளைத் தொடர்ந்து ஆய்ந்து வருபவர். வீதி நாடகங்களின் மூலம் சமூக நீதி தேடுபவர்.

## ந.இளங்கோ

நொண்டி நாடகத்தில் ஆய்வியல் நிறைஞர் பட்டமும் இலக்கிய மற்றும் கிறித்தவ சமய கருத்தாடல் பற்றிய ஆய்வில் முனைவர் பட்டமும் பெற்றவர். இவரது ஆய்வேடு மைசூரிலுள்ள இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தின் பொருளுதவியால் நூல் வடிவம் பெற்றுள்ளது. சென்னைப் பல்கலைக்கழகக் கிறித்தவத் தமிழ் இலக்கியத்துறையின் மூலம் பதிப்புப் பணியில் ஈடுபட்டு ஆறு ஆங்கில நூல்களை வெளிக்கொண்டு வந்திருக்கிறார். தகவல் தொடர்பியியலில் முதுகலைப் பட்டமும் மொழியியலில் நிறைசான்றிதழும் பெற்றவர்.

# பாரதியாரின் இயற்கைப் பாடல்கள்

*தி.ரா. செல்வராசன்*

மக்களின் புலனுகர்ச்சிக்கு விருந்தாகி அழகு நிலையமாகத் திகழும் இயற்கை, கவிஞர்களின் புலனுணர்விற்கு வித்தாகிக் கருத்துச் சுரங்கமாகத் திகழ்கிறது. தமது மனத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு வடிவம் கொடுக்கச் சொற்களைத் தேர்ந்தெடுக்கும் கவிஞர்கள் அவற்றிற்கு உயிராற்றல் ஊட்டுவதற்காக இயற்கையிடமே சரண் அடைகிறார்கள். தோன்றி மறையும் நிலைபேறு அற்ற இயற்கை, கவிஞர்களின் பாடல்களில் இடம் பெறுவதன் வாயிலாக என்றும் மரணமிலாப் பெருவாழ்வு பெறுகின்றது. இத்தகைய இயற்கைக்கும் கவிஞர் இதயத்திற்கும் "என்று நீ அன்று நான் உன்னடிமை அல்லவா" என்று கூறத்தகும் உறவு நிலை நீண்ட நெடுங்காலமாகத் தொடர்ந்து வருகின்றது.

பாரதியார் தேசியக்கவி என்று முத்திரை பதிக்கப் பெற்றவர். எனினும் அவரது பாடல்கள் பல்வேறு பொருள்கள் மண்டிக்கிடக்கும் கருவூலமாகத் திகழ்கின்றன. பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேட்கை கொண்ட பாரதியாரின் பாடல்களில் இயற்கைப் பாடல்கள் எனச் சுட்டி உரைக்கக் கூடியவை மிகச் சிலவே. தோத்திரப் பாடல்களில் சூரிய தரிசனம், ஞாயிறு வணக்கம், ஞானபானு, வெண்ணிலாவே. தனிப்பாடல்களில் காலைப்பொழுது, அந்திப் பொழுது, நிலாவும் வான்மீனும் காற்றும், மழை, புயற்காற்று, பிழைத்த தென்னந்தோப்பு, அக்கினிக்குஞ்சு, தூமகேது, ஒளியும் இருளும் ஊழிக் கூத்து. ஞானப்பாடல்களில் சிட்டுக்குருவியைப் போலே, பொய்யோ மெய்யோ, வசனகவிதையில் காட்சி, காற்று, கடல், ஜகத்சித்திரம் என்பனவற்றை இயற்கைப் பாடல்கள் என்று குறிப்பிடலாம். எனினும் இயற்கைப் பொருள்களைச் சுட்டி உரைப்பதைத் தேசபக்திப் பாடல்களிலும் இயற்கைக் காட்சிகளை வருணித்தலைக் குயில்பாட்டு, பாஞ்சாலி சபதம் என்னும் இலக்கியப் படைப்புக்களிலும் காணலாம்.

காஞ்சிப் பட்டின் ஊடே கண் கவரும் பொன் சரிகை கலந்து வருதல் போலப் பாரதியாரின் பலப்பல பாடல்களில் இயற்கையின் கூறுகள் இடம் பெற்றுள்ளன.

சங்கப்பாடல்களில் அகத்தெழும் உணர்வுக்குப் பின்புலமாக இருந்த இயற்கை, நீதி இலக்கியங்களில் கருத்து விளக்கக் குறியீடுகளாகவும், பக்திப்பாடல்களில் திருக்கோயில் சூழலாகவும் பரம்பொருளின் பிரதிபலிப்பாகவும் பயன்படுத்தப் பெற்றுக் காப்பியங்களில் நாடு, நகர்ப்படலங்களில் வருணனையாக வளர்ந்தது. பாரதியார் இயற்கைப் பொருள்களாகிய மலை, ஆறு, கடல் முதலியவற்றைப் போற்றிப் பாடுவதுடன் அமையாது அவற்றிற்கும் மக்களுக்கும் உள்ள உறவைக் காட்டி அவற்றைப் போற்றும் பாங்கினைச் சுட்டி நாட்டுப்பற்றினை ஊட்டினார். வெள்ளிப் பனிமலை, மேலைக்கடல், இனிய பொழில்கள், நெடிய வயல்கள், கங்கைக் கோதுமை, காவிரி வெற்றிலை காவிரி, தென்பெண்ணை, பாலாறு முதலியன நாட்டின் மீது பற்று வளர்ந்திடப் பாரதியால் எடுத்தாளப்பட்டன. சிந்து நதியின் மிசை நிலவு, நாட்டு ஒருமைப்பாட்டிற்கே ஒரு பெரும் இலக்கியச்சுடராகப் பாரதியின் பாட்டில் ஒளி வீசுகிறது. 'காக்கை குருவி எங்கள் சாதி' என்று அஃறிணை உயிர்ப் பொருளுடன் உறவுமுறை காட்டுவதும் பாரதியின் தனித் திறமாகும். இயற்கை வேறு மனித இதயம் வேறு என்ற அறியாமையை அகற்றி ஆன்ம நேய ஒருமைப்பாட்டு ஒளியை ஏற்றிடப் பாரதியாரின் பாடல்களில் இயற்கைப் பொருள்கள் பயன் படுத்தப்பட்டுள்ளன.

குயில்பாட்டின் தொடக்கம், திருமுருகாற்றுப்படைபோல் அமைந்துள்ளது. காலையிளம் பரிதி கடலில் தோன்றும் காலைக் காட்சியுடன் வேகத் திரைகள் வேதப்பொருள் பாடுகின்றன. தங்கம் உருக்கித் தழல் குழைத்துத் தேனாக்கி எங்கும் பரப்பியதோர் இங்கிதம் உடையதாகக் காலைக் கதிரவன் ஒளி போற்றியுரைக்கப்படுகிறது.

"புல்லை நகை உறுத்திப் பூவை வியப்பாக்கி
மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சி தந்து
விண்ணை வெளியாக்கி, விந்தை செயும் சோதி"

எனக் காலை வேளையில் சூரியவொளியால் உலகில் தோன்றும் மாற்றங்களைப் பட்டியலிட்டுக் காட்டுவதன் மூலம் உலக வாழ்க்கைக்குக் கதிரவனே முதன்மையாய் நிற்றல் உணர்த்தப்படுகிறது.

பாஞ்சாலி சபதத்தில் இடையில், மாலைக் காட்சி வருணனையை ஒப்பற்ற வகையில் பாரதியார் வண்ணக் கலவையாகத் தீட்டிக் காட்டியுள்ளார். மக்கள் தாம் வாழும் உலகத்தில் தோன்றும் இயற்கை அழகினைக் கண்டு மகிழாமல் உழல்வதைக் கண்டு வேதனையுற்ற மனத்தினராய்ப் புதுப்புது கோலம் கொள்ளும் அந்தி வானத்துச் செவ்வான் அழகை ஆசை தீரப் பாடியுள்ளார் பாரதி. வறுமையிலே வாடிய கவிஞன், மேற்கு வானில் காண்பதெல்லாம் தங்கத் தீவுகள், தங்கத் தோணிகள், தங்கத் திமிங்கிலம்.

பாரதியாரின் பாடல்களில் இயற்கை உவமையாகவும் உருவகமாகவும் படைக்கப்பட்டுள்ளது. பன்றியைப் போலிங்கு மண்ணிடைச் சேற்றில் படுத்துப் புரளாதே', 'பிணத்தினை விரும்பும் காக்கை' என்பன போன்ற உவமைகள் இழிவுச் சுவைக்கு எடுத்துக்காட்டுக்கள். பின்னை இருட்கணம், அறிவெனும் இரவி துன்பமென்னும் கடல், அன்பெனும் தேன் போன்ற உருவகங்கள் நெஞ்சில் சித்திரம் தீட்டுகின்றன. மேலும் 'வெள்ளலைக் கைகளைக்கொட்டி முழங்கும் கடலை'யும் 'வான வளையம் மூலைக்கடலினைமுத்தமிட்டே தழுவுதலையும் கூறி இயற்கையை ஆளுருவாக்கம் (PERSONIFICATION) செய்கிறார் பாரதியார்.

இயற்கைப் பொருள்களக்குப் பொருத்தமான அடைமொழிகளைத் தந்து அவற்றின் சிறப்பியல்புகளை விளக்கும் பாரதியின் திறன் பாப்பா பாட்டில் ஒளி வீசுகின்றது. சின்னஞ்சிறு குருவி, வன்னப் பறவை, கொத்தித் திரியும் அந்தக் கோழி, எத்தித் திருடும் அந்தக் காக்கை, பாலைப் பொழிந்து தரும் பசு, வாலைக் குழைத்து வரும் நாய், வண்டி இழுக்கும் குதிரை, அண்டிப்பிழைக்கும் ஆடு என்ற தொடர்களால் பாரதியார் உயிர்களிடத்தில் அன்பு கொள்ளத் தூண்டுகிறார். தின்ன வரும் புலியிடத்தும் அன்புகாட்டச் செய்து அதனையும் அன்னை பராசக்தியின் உருவம் என்று போற்றி வணங்க வேண்டும் என்னும் பாரதியாரின் அன்பின் எல்லை நமக்குப் புலனாகிறது. அடிப்படையான மனித உணர்வுகள் என்றும் மாறாதவை என்னும் உண்மையை வலியுறுத்த பாரதியார் இயற்கையின் நியதியை அடுக்கிச் சொல்கிறார்.

"தேனை மறந்திருக்கும் வண்டும் – ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும் – இந்த
வையம் முழுவதும் மில்லை".

இறைவனின் அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகச் சூரியன் சுட்டப்படுகிறான். எனினும் சூரியனை முழுமுதற் கடவுளாக மதித்து வணங்குதல் பண்டைத் தமிழர் மரபு அன்று. வேத வழக்கப்படி சூரியனைத் தொழும் மரபுக்கேற்பப் பாரதியார் சூரிய தரிசனத்தில் பரிதியைப் பொன் செய் பேரொளித் திரளே என்று போற்றி வணங்குகிறார்.

'காலைப்பொழுது' என்ற தலைப்பில் பாடிய பாட்டில் பறவைகளைப் படிமங்களாகக் கொண்டு வாழ்வியல் உண்மையை விளக்குகிறார் பாரதியார். ஊயிரினங்களில் பறவைகளையே மிகுதியாகத் தம்பாடலில் குறிப்பிடுகிறார். சிட்டுக்குருவியை விடுதலையின் சின்னமாக அவர் கருதுகிறார். பச்சைக்கிளியை முன்னிலைப்படுத்திக் கிளிப்பாட்டுப் பாடியுள்ளார். முப்பெரும் பாடல்களில் தத்துவப் பேழையாகிய குயில்பாட்டும் குயிலுக்குத் தலைமை தருகிறது. குயிலின் குரலில் கவிஞர் 'மின்னல் சுவை' காண்கிறார். மின்னல் ஒரு நொடியில் மின்னிக் கண்ணைப் பறிப்பது போலக் குயில் தன் குரல் இனிமையால் எல்லாருடைய கவனத்தையும் தன்பால் ஈர்க்கும் திறம் கொண்டது. ஜகத் சித்திரம் என்ற சிறு நாடகத்தில் வசனகவிதைப் பாங்கில், எங்கே 'எங்கோ' எனவும். 'கிலு கிலு கிலு கிலு' எனவும். 'கிக்கீ', 'கிக்கீ' எனவும் 'சேக்க', 'சேக்க' கேட்க, கேட்க' எனவும், 'கெக்கெக்கே' 'பகுக்குக் குக்குக் குக்குக் குக்குக் குக்கூவே' என்வும் 'கீச், கீச், கீச், கீச்', 'கிசு, கிசு, கிசு, கீச்' என்றும் 'ரங்க ரங்க' எனவும் பல்லாயிரம் வகையினில் குயில்களும் கிளிகளும், பல ஜாதிப் புட்களும் இனிய பூங்குரலுடையன என்பது பாரதியின் ஒலிநாடாப் பதிவாகும். பாரதியார் ஒலி இன்பத்தில் நாட்டம் பெரிதுடையார் என்பது அவரது பாடல்களில் ஆண்டுள்ள ஒலிக் குறிப்புச் சொற்களால் நன்கு அறியலாம். மேலும் மனித ஜாதி மிருக இனம் ஆகியவற்றைவிடப் பறவை இனமே காதலின்பம். துய்த்துக் களித்துப் பாடிக் கொஞ்சி மகிழ்வதாகப் பாரதியார் வியந்து கூறுகிறார். "துயரத்தை அழிப்போம்; கவலையைப் பழிப்போம்" என்பதே பறவையினங்கள் உலகுக்கு உணர்த்தும் வாழ்க்கை நெறியாகும். மனத்தைச் சிறு புள்ளாக ஆக்கிவிட்டால் இன்பத்துள் இன்பம் காணலாம். மனித மனம் மேலும் மேலும் உயர்ந்து நல்லுணர்வு பெறவேண்டும். அந்த உயர்வுக்கு இலக்கு, "தாரகை யென்ற மணித்திரள் யாவையும் சார்ந்திடப் போ மனமே" என்ற ஏவலேயாகும்.

மழைக்காட்சியைத் தெய்வீகக் காட்சியாகக் கவிஞர் காண்கிறார் குயில் பாட்டில் நாட்டில் ஒலிக்கும் பல்வேறு இனிய ஓசைகளை எல்லாம் பட்டியலிட்டுக் காட்டும் பாரதியார் மழைப்பாட்டில் முழக்கும் தாளவகைகள் திருப்புகழ் சந்த இன்பத்தை நினைவூட்டுகின்றன.

1916–17ல் பாண்டிச்சேரியில் வீசிய புயல்காற்றினை, மனைவியும் கணவனும் பாடுவதுபோல் கவிஞர் படைத்துள்ளார். காற்றடிக்கக் கடல் குமுற, வீடுகள், தோட்டங்கள் பாழ்படும் வேளையிலும் பாரதியார்க்குப் பராசக்தி மீது நம்பிக்கை தோன்றுகிறது. பிழைத்த தென்னந்தோப்பில் இயற்கையின் இரக்கமற்ற செயலைக் கண்டு துவளும் பாரதியின் குழந்தை நெஞ்சம் முடிவில் பராசக்தியை வாழ்த்தி மகிழ்கிறது.

தூமகேது தோற்றத்தால் நாட்டில் துன்பங்கள் ஏற்படும் என்பது பொய்யோ மெய்யோ என்று ஐயுற்றுக் கேட்கிறார். வானநூலினில் தேர்ச்சி கொள்ளாத பாரதமக்களின் மடமை கண்டு வருந்துகிறது கவிஞர் நெஞ்சம். இயற்கையைப் பாடும்போதும் நாட்டு மக்களை மறவாத கவிஞரது மனிதநேயம் புலப்படுகிறது.

பாரதியின் இலக்கியப் படைப்புக்களுள் 'குயில்பாட்டு' தத்துவ நோக்கில் பல்வேறுபட்ட கருத்துக்களுக்கு நிலைக்களனாக விளங்குதல் போல இயற்கைப் பாடல்களுள் 'அக்கினிக்குஞ்சு' என்னும் ஐந்து அடிப்பாடல் ஆழம் மிக்கதாய் அமைந்துள்ளது. அக்கினிக் குஞ்சு என்னும் சொற்றொடர் பாரதி படைத்துத் தந்த புதுச் சொல் வடிவாகும்.

"அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் – அதை
அங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்:
வெந்து தணிந்தது காடு – தழல்
வீரத்தில் குஞ்செனன்றும் மூப்பென்றும் உண்டோ ?
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்".

அக்கினிக்குஞ்சு என்பது ஒரு குறியீட்டுருவம். அது எதனைக் குறிக்கிறது என்பது அவரவர் கருத்தோட்டத்திற்கு இயைய அமைகிறது.

நெருப்புத் துண்டு என்று பேச்சு வழக்கில் கூறப்படுவது அக்கினிக்குஞ்சு என்று கவிதை வடிவம் பெற்றுள்ளது. நெருப்புச்சுடர் வெளிக்காற்று வேகத்தால் அலைக்கழிக்கப்பட்டு அணைந்து போவதும் உண்டு. ஆனால் காக்கும் கரம் துணையிருந்தால் சூடும்

சுட்டும் பெருகும். தீ பிற பொருளைச் சுட்டெரிப்பதோடு மட்டுமின்றித் தான் இருக்கும் இடத்தையும் அழித்துவிடும். அவ்வாறே தனியொரு மரத்தின் பொந்தில் வைக்கப்பட்ட அக்கினி குஞ்சு பரந்து விரிந்து அடர்ந்த காட்டினையே அழித்தொழித்து விட்டது.

"தான் கவிதையைமட்டும் எழுதப் பிறந்தவன் அல்லன். 'நாட்டுக்கு உழைத்தல்' என்ற சங்கல்பம் செய்து கொண்டு, சுதந்திரத்திற்காகத் துடித்தது அவனது இதயம். அப்போதுதான் இலேசாகக் கொழுந்து விட்டு எரியத் தொடங்கிய விடுதலை வேள்வியில் முதன்முதலில் துணிந்து குதிக்கிறான் எரிவோமா? வேண்டாமா? என்று தயங்கிக் கொண்டிருந்த அந்த வேள்வித்தீயை இவ்வக்கினிக் குஞ்சு ஊதி, ஊதி பெரும் நெருப்பாக்குகிறது" என்ற தி. முத்து கிருஷ்ணனின் கருத்தும் சிந்திக்கத்தக்கது.

"பாரதியாருக்கு அழிவுச் சக்தியிலே மகிழ்ச்சி வராது; தீமையை அழிப்பதிலேதான் மகிழ்ச்சி பொங்கிக் களி நடம்புரியும். பாரதி உள்ளமாகிய காட்டிலே சூழ்ந்திருந்த ஐயம், அறியாமை, அச்சம், கவலைகள் எல்லாம் ஆக்கச் சக்தியாகிய அக்கினிக் குஞ்சால் அழிவுற்றது. அறியாமை என்னும் காடு அழிந்தது. பாரதியார் மனம் மகிழ்ந்து ஆடுகிறார். ஆத்ம ஞானியாகிய பாரதி அக்கினிக் குஞ்சினைச் சக்தியின் வடிவாகக் காண்கிறார். உள்ளத்தைக் காடாகப் பல இடங்களில் உருவகிக்கிறார்" என்று விளக்கம் தருகிறார் கதிர் மகாதேவன்

மேலும் இக்குறியீடு விடுதலை அல்லது சுதந்திர வேட்கையைக் குறிப்பதாகவும் சிலர் சொல்வர். கருதுவார் கருத்திற்கேற்பக் காலச் சூழலுக்கு ஏற்ப அக்கினிக்குஞ்சு வெவ்வேறு பொருள் பயப்பதாக உள்ளதே பாரதியின் படைப்புத் திறனுக்கோர் சான்றாகும்.

புதியன படைக்கும் நோக்கில் பாரதி படைத்த வசன கவிதைகள், பண்டைக்கால வேதங்கள் இயற்கையைத் தெய்வமாகக் கருதி, வழிபட்டு, வரம் வேண்டிப் பாடுவது போல அமைந்துள்ளன என்பர். வசன கவிதையில் கவியின் ஆழமும் கதையின் போக்கும், நாடகப் பாங்கும் இதில் பின்னிப் பிணைந்துள்ளன.

'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் எங்கள் இறைவா' என்று வியந்து போற்றிப்பாடிய பாரதியின் இந்த ஓரடிக்கு அமைந்த விளக்கமாக வசன கவிதையில் இயற்கைக் கூறுகள் பலப்பல வகையில் போற்றப்படுகின்றன.

'இவ்வுலகம் இனியது' என்று தொடங்கும் வசன கவிதை உலகை நேசிக்கவும் இயற்கையை மதிக்கவும் தெய்வங்களை வேண்டவும் நம்மை வற்புறுத்துகின்றது; அதற்கு அடிப்படையாகக் காணும் பொருள்கள் எல்லாம் ஒன்றின் வெவ்வேறு வடிவங்கள் என்று தெளிவுறுத்துகின்றது; எல்லாம் தெய்வத்தின் வெளிப்பாடே என்று எண்ணவும் செய்கிறது.

ஞாயிறு அறிவுத் தெய்வத்தின் கோயில் என்றும் கண்ணே அவனது வீடு என்றும், விழிகளே அவனது இருக்கை என்றும் கூறி அனைத்துக்கும் முதலாய் நிற்பது ஞாயிறே என்று ஒளி பாய்ச்சுகின்றார் கவிஞர்.

மழை பெய்வது கவிஞர்க்குப் பாடுவதாகத் தோன்றுகிறது. அது பலகோடி தந்திகளுடையதோர் இசைக்கருவி. வானத்தில் இருந்து அமுத வயிரக் கோல்கள் விழுகின்றன. இயற்கையை அனுபவிக்கும் வித்தையை நமக்குச் சுட்டிக் காட்டுகின்றார் பாரதியார்.

"மழையும் நின் மகள் மண்ணும் நின் மகள்" என்று மழைக்கும் ஞாயிற்றுக்கும் உறவு காட்டப்படுகிறது. 'மேகப் பூக்கள் மின்னல் பூவைச் சொரிகின்றன'வாம். உணர்வு ஊட்டி உறவைக்காட்டி ஒற்றுமைப் படுத்திக் காட்டுவதே இக்கவிஞரின் தனிச் சிறப்பு. காற்று பேராற்றலின் சின்னம். காற்றின் வேகத்தால் இரண்டு கயிறுகள்— கந்தன்வள்ளி — அசைந்து ஆடுவது அன்பின் நாடகமாக நடத்திக் காட்டப்படுகிறது. சுற்றுப்புறச் சூழலைக் கெடுக்காமல் பாதுகாக்கப் பாரதி கூறுவன இவையே; "அவன் வரும் வழியில் சேறு தங்கலாகாது. நாற்றம் இருக்கலாகாது. அழுகின பண்டங்கள் போடலாகாது. புழுதி படிந்திருக்கலாகாது எவ்வித அசுத்தமும் கூடாது" மேலும் பல்வகை உயிர்களின் வாழ்வுக்கும் காற்றே அடிப்படை. அந்தக் காற்றும் மகாசக்தியின் ஒரு கூறுபாடே ஆகும். "காற்றே , உயிர்க் கடலிலிருந்து எங்களுக்கு நிறைய உயிர் மழை கொண்டுவா" என்ற பாரதி வேண்டுவது மானுடம் மாண்புறுதற்கே!

பாரதியின் இயற்கைப் பாடல்களில் இயற்கை உடலாகவும் இறைமையே உயிராகவும் போற்றப்பட்டுள்ளன. உலகப் பொருள்கள் எல்லாம் கடவளின் திருவடிவே என்பது கவிஞரின் உறுதியான கருத்து. 'நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே, நீங்களெல்லாம் சொற்பனந் தானோ? பல தோற்ற மயக்கங்களோ? என்று கேட்டு, அவை மாயை என்ற கருத்தை மறுத்துக் 'காண்பது சக்தியாம் — இந்தக் காட்சி நித்தியமாம்' என்னும் கருத்தை உறுதியாகக் கூறுகிறார்.

இயற்கை அனைத்தும் அன்னை பராசக்தியின் வெளிப்பாடே என்பது பாரதியின் நம்பிக்கை. இயற்கையின் அளப்பரும் ஆற்றல் அனைத்தும் மக்களுக்கும் வந்தெய்தி அவர்கள் மனவலிமையைப் பெற்றிட வேண்டும் என்பதில் பாரதி தளராத உறுதி கொண்டிருந்தார். "வல்லமை தாராயோ இந்த மாநிலம் பயனுற வாழ்வதற்கே" என்பது அவரது உயிர்க்கதறல். "நமது விழிகளிலே மின்னல் பிறந்திடுக" என்பது அவரது இதய வேட்கை.

இயற்கை – இறைமை – இதய ஆற்றல் – இனிய வாழ்வு ஆகியவற்றின் பின்னல் கோலமே பாரதியின் இயற்கைப்பாடல்கள்!

# சுற்றுப்புறச் சூழலைச் சுற்றி

*தி. இராசகோபாலன்*

இறையோடு இயைந்த இயற்கையையும், இயற்கையோடு இயைந்த இறையையும் போற்றி வருகின்ற நாடு, இப்பாரத நாடு. ஐம்பூதங்களையும் ஆண்டவன் படைப்பாக எண்ணி, அவற்றை மதித்தும் துதித்தும் வருகின்ற மண், இந்திய மண். இயற்கையைப் போற்றிப் பாதுகாத்த வரையில், இயற்கையும் வாழ்ந்தது; மனிதனும் வாழ்ந்தான். இயற்கையைப் பாழ்படுத்தும் பொழுது, இயற்கையும் வீழ்கிறது; மனிதனும் வீழ்கிறான். இயற்கை மனிதனுக்கு மாபெரும் எச்சரிக்கையை எழுப்பிக் கொண்டிருக்கிறது. அந்த எச்சரிக்கையை ஏற்றுச் சுற்றுச் சூழலைக் காத்தால், வையத்துள் வாழ்வாங்கு வாழலாம்.

சுற்றுப்புறச் சூழலின் இன்றியமையாமையை வேறெந்த இனமும் உணர்வதற்கு முன்னாலே, உணர்ந்த இனம், தமிழினம். 'புறந்தூய்மை நீரான் அமையும்', 'நிலத்தியல்பால் நீர் திரிந்து அற்றாகும்' என்பன போன்ற கருத்துக்கள் வள்ளுவத்தில் காணக் கிடக்கின்றன. மகாகவி பாரதியார் தூய்மையான காற்றின் அவசியத்தையும், நல்ல காற்று ஆயுளை நீட்டும் என்பதையும், "காற்றே வா! மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு, மனத்தை மயலுறுத்துகின்ற இனிய வாசனையுடன் வா! இலைகளின் மீதும், நீரலைகளின் மீதும் உராய்ந்து, மிகுந்த பிராண ரசத்தை எங்களுக்குக் கொண்டு கொடு! காற்றே, வா!எமது உயிர் நெருப்பை நீடித்துநின்று நல்லொளி தருமாறுநன்றாக வீசு!" எனும் வசன கவிதையின் மூலம் அன்றே அறிவுறுத்தியிருக்கிறார்.

தமிழ்ச் சான்றோர்களுடைய எச்சரிக்கைகள் எல்லாம் ஏட்டிலே இருக்கின்றனவே தவிர, நாட்டிலே இருபதாம் நூற்றாண்டு மனிதன் முற்றாக மறந்து விட்டான். இயந்திர வேகத்தினாலும், செயற்கை சுகபோகங்களாலும் விண்ணும் மண்ணும் மாசுபட்டன. சுற்றுப்புறச் சூழலை இந்தவிதமாக அழுக்குப்படுத்திக் கொண்டே போனால், அடுத்த சில ஆண்டுகளில் எதிர்பாராத பருவ மாறுதல்களும், உலகளவில் வறட்சியும், வெள்ளப்பெருக்கும், பெரும்

பஞ்சங்களும் ஏற்படக்கூடும்" என்று டாக்டர் லாஸ்டர் பிரவுன் எச்சரித்திருக்கின்றார். சுற்றுப்புறம் என்றால் என்ன? அதன் சூழல் என்ன? அது கெடுதல் எங்ஙனம்? நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகியன சுற்றுப் புறமாகும். கவின்மிக்க காடுகள், ஓங்கியுயர்ந்த மலைகள், கரையோடும் நதிகள், கரை காணாக் கடல்கள், இவற்றில் வாழும் விலங்குகள், பறவைகள், உயிரினங்கள் போன்றன சுற்றுப்புறச் சூழலோடு தொடர்புடைய அங்கங்களாகும். இத்தகைய சுற்றுப் புறச்சூழல் கெடுவதற்குப் பல காரணங்களைச் சொல்லலாம். 1) மக்கள் தொகைப் பெருக்கம் 2) போக்குவரத்து ஊர்திகள் கக்கும் புகை 3) தொழிற்சாலைகள் நாளுக்கு நாள் வெளியிடுகின்ற திட, திரவ கழிவுப் பொருள்கள் 4) ப்ரிட்ஜ் போன்ற குளிர் சாதனப் பொருட்களை அடிக்கடி திறந்து மூடல் 5) மிகுதியான விளைச்சல் வேண்டி நிலத்திற்குப் பயன்படுத்துகின்ற பூச்சிக் கொல்லி மருந்து, இரசாயனப் பொருட்கள் 6) காடுகள் அழித்து வனவிலங்குகளை வேட்டையாடுதல் 7) அணு குண்டுகள் வெடிப்பு 8) நச்சு வாயுக்கள் கசிவு 9) புகைப் பிடிக்கும் பழக்கம் 10) பாமர மக்களுடைய அறியாமை ஆகியன ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்த காரணங்களாகும்.

## நிலம் மாசுபடல்

மேலே சொன்ன காரணங்களால் ஐம்பெரும் பூதங்களுள் நிலம், நீர் காற்று ஆகியன நம்மால் பெரிதும் அழுக்குப்பட்டு, அவற்றால் நாமும் இழுக்குப்படுகின்றோம். முதலில் நிலம் அழுக்குப்படுவதையும் அசுத்தப்படுவதையும் நோக்கலாம். தோல் தொழிற்சாலை, வடி சாராயத் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவு நீர்களில் படிந்திருக்கும் வண்டல்கள் நிலத்தில் படிவதால், அந்நிலத்தில் எந்தப் பயிர்களும் விளைவதில்லை. அதனால் விளைச்சல் நிலங்கள் தரிசு நிலங்களாகின்றன. ஆடு மாடுகளுக்குரிய மேய்ச்சல் நிலங்களும் விளைச்சல் நிலங்களும் வறட்டு நிலங்களாவதால், கால் நடைப் பராமரிப்பும் பாதிக்கப்படுகின்றது.

நம் நாட்டிலும் மலேசியாவிலும் மரங்கள் வெட்டப் படுவதால், நிலம் மாசுபடுகிறது. பாமர மக்கள் விறகுக்காகவும், படித்தவர்கள் தொழிற்சாலையின் கச்சாப் பொருட்களுக்காகவும் மரங்களை வெட்டுவதால், நிலத்தில் அரிப்பு ஏற்பட்டுக் கெட்டியாக இருக்க வேண்டிய மண், விரிசல் அடைகிறது. "உலகில் மனித இனம் உள்பட 10, 75, 840, விலங்கினங்கள் உள்ளன. 3,50,000 தாவர இனங்கள்

இருக்கின்றன. இவையனைத்தும் உயிர் வாழத் தூய்மையான காற்றைக் கொடுக்கும் மரங்கள் இன்று அழிந்து வருகின்றன. நமது நாட்டின் தேசியக் கொள்கைப்படி 33% மரங்கள் நிறைந்த காடுகள் இருக்க வேண்டும். ஆனால், இன்று 11.12% பகுதிகளே உள்ளன. அத்துடன், இந்தியாவில் ஆண்டொன்றுக்கு ஒரு கோடி மரங்கள் வெட்டப் படுகின்றன. இது தொடர்ந்தால், இந்தியாவில் பதினைந்து ஆண்டுகளில் மரங்களே இருக்காது" என்று சு.சிவகாமி அச்சுறுத்துகின்றார்.

சீர்காழி, நாகப்பட்டினம் போன்ற இடங்களில் நன்செய் நிலங்கள் முதலாளி வர்க்கத்தால் இறால் பண்ணைகளாக மாற்றப் பட்டதால், நிலத்தின் சுற்றுப்புறச் சூழலுக்குப் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது. இறால்களின் குறுகிய காலப் பெருக்கத்திற்குப் போடப்படுகின்ற உயிர் எதிரிப் பொருட்களும் (ஆன்டி — பயாடிக்) இரசாயனப் பொருட்களும் நிலத்தை மாசுப்படுத்துவதோடு நீரையும் மாசுப்படுத்துகின்றன.

இறால் பண்ணைகளிலிருந்து வெளியேற்றப்படும் நச்சு நீர் உப்பங்கழிகள் வழியாகக் கடல்நீரில் கலக்கின்றது. இந்த நச்சு நீரால் கடற்கரையோரங்களிலுள்ள தென்னை மரங்கள் பட்டுப் போகின்றன. இரண்டாவதாக, கடற்கரையிலிருந்து பத்து கிலோ மீட்டர் பரப்புக்குட்பட்ட கடல் நீரில் வாழும் மீன்போன்ற உயிரினங்கள் செத்துப் போகின்றன. கடற்கரையில் வாழுகின்ற மீனவர்கள் நச்சுப்பட்ட நிலத்தடி நீரைப் பருகுவதால், காலரா, மஞ்சள் காமாலை, தோல்வியாதி போன்ற நோய்களுக்கு ஆட்படுகின்றனர்.

பூச்சிக்கொல்லி மருந்து—இரசாயனப் பொருட்களால் நச்சுப்பட்ட நீர் கடலில் கலப்பதால், 1990ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மத்திய தரைக்கடல் பகுதிகளிலும்—அமெரிக்கக் கடற்கரைகளிலும் மாண்ட நூற்றுக்கணக்கான டால்பின்கள் நோய் எதிர்ப்புத் திறன் குறைந்து, செத்துப் போனதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இச்சீர்கேட்டை உற்று நோக்கிய சுவீடன் நாட்டு ஆசிரியை ஒருவர், "உலகம் முழுவதும் மக்கள் பொய் சொல்லுகிறார்கள். உதாரணமாக, பெஸ்டிசைடு என்பதை நமக்குப் பூச்சிமருந்து எனக் கற்பிக்கிறார்கள். இது மருந்தல்ல; நஞ்சு. மனிதனைக் கொல்வது எப்படி மருந்தாகும். உண்மையில் இந்த மருந்து, பூச்சிகளை மட்டும் கொல்வதில்லை; எல்லாவற்றையும் கொல்கிறது. ஆகவே

இதைப் பயோசைடு என்று தான் கூற வேண்டும்" என்று வேதனையில் விளம்புகின்றார்.

இறால் பண்ணைகளால் ஏற்படுகின்ற சுற்றுப்புறச் சூழல் பாதிப்பு, நிலத்தில் தொடங்கி– நீரில் தொடர்ந்து, அந்நீரை நம்பி வாழும் உயிரினங்கள் வரை செல்லுகின்றது. இறால் பண்ணைகளால் மேலும் பாதிப்பு வரக்கூடாது என நினைத்த மேத்தா பட்கர், "தாய்லாந்து–தைவான்–இந்தோனேஷியா–பிலிப்பைன்ஸ் போன்ற நாடுகளில் இறால் பண்ணை முதலாளிகள் இரவோடு இரவாக நாட்டை விட்டு ஓடிய காட்சியை நினைவுபடுத்தி" நம் நாட்டு முதலாளிகளை எச்சரிக்கின்றார். நல்லூழ் காரணமாக, 1992 பிரேசில் நாட்டு ரியோவில் கூடிய (எர்த் சம்மிட்) உச்சி மாநாட்டில் அனைத்து நாடுகளும், இக்கோட்பாட்டை முன்னெச்சரிக்கையாக ஏற்றுக் கொண்டுவிட்டன.

## நீர் மாசுபடல்

நிலத்தையும் நீரையும் பூமாதேவி என்றும் கங்காதேவி என்றும் வழிபட்டவர்கள் நம்மவர்கள். ஆனால், இவற்றை நாம் இன்று அசுத்தப்படுத்துவது போல உலகில் வேறு யாரும் செய்யமாட்டார்கள். மரத்தை ஸ்தல விருட்சமென்று கோவிலில் வைத்துக் கும்பிட்டவர்கள் இந்தியநாட்டு மக்கள். ஆனால், இன்று இந்தியரைப் போல் மரங்களை வெட்டுவதற்கும் எரிப்பதற்கும் யாரும் முன்வரமாட்டார்கள். சதுப்பு நிலக்காடுகள் கடல்நீர் உயர்வதையும் தாழ்வதையும், புயற்காற்று எழுவதையும் கட்டுப்படுத்துகின்றன. மேலும், அக்காடுகள் அலைகளின் ஆற்றலைக் குறைப்பதன் மூலம், கடற்கரை அரிப்பையும் தடுக்கின்றன. வடசென்னைவாசிகள் வங்கக்கடற்கரை நிலத்தை அரித்துக்கொண்டே வருவதை நாளும் கண்டு வருகின்றனர்.

கங்கையாறு இமாலயத்தில் உற்பத்தியாகி, 2525 கி.மீ. பாய்ந்தோடி, வட இந்திய மக்களின் வாழ்வோடும் தாழ்வோடும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றது. என்றாலும், வாரணாசி, அலகாபாத், கல்கத்தா போன்ற நகரங்களிலுள்ள தோல் தொழிற்சாலை, வடி சாராயத் தொழிற்சாலைகளிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுநீர், கங்கையிலே தான் வந்து விழுகிறது. 1984ஆம் ஆண்டு கங்கையின் நச்சுநீரால் கல்கத்தாவில் 50,000 மனிதர்கள் வயிற்றுப் போக்கால் அவதியுற்றார்கள். 2000 மனித உயிர்கள் காலராவில் மடிந்தார்கள். காரணம் நச்சுநீரில் உற்பத்தியாகிய நோய்க்கிருமிகள். நம்நாட்டு அரசு

வரையறைப்படி 100மி.லிட்டர் தண்ணீரில் 10,000 கிருமிகள் இருக்கலாம். ஆனால் கங்கை நீரில் 100மி. லிட்டர் தண்ணீரில் 24,000 கிருமிகள் இருக்கின்றனவாம். இதற்குக் கழிவுநீர் கலப்பது மட்டுந்தான் காரணமா? இல்லை: வேறொன்றும் இருக்கின்றது.

'இறந்துபோன உடலைக் கங்கைக்கரையில் எரித்து, பாதி எரிந்தும் எரியாத உடலைக் கங்கை நீரில் தூக்கிப்போட்டால், அவனுக்கு மோட்சம் கிடைக்கும்' என்ற மூடநம்பிக்கை இந்த நாட்டு மக்களுக்கு இருப்பதால், கங்கைநீர் களங்கப்படுகிறது. இச்சீர்கேட்டை டாக்டர் எல்.ஜெயசேகர் அவர்கள், "கங்கைக் கரையில் பிணங்களை எரியூட்டுவதைத் தடுப்பதற்காக, அரசு ரூ.45 லட்சம் செலவில் மின்சாரப் பிணஎரியூட்டியை நிர்மாணித்தது. அதில் தகனம் செய்வதற்கு ரூ.60 தான் கட்டணம். 630 டிகிரி செண்டிகிரேட் வெப்பத்தில் சுமார் 45 நிமிடங்களில் சடலங்கள் சாம்பலாகிவிடும். அந்தச் சாம்பல் கூட கரைக்குமிடம் அதே நதிதான். அதுவொரு புறமிருக்க, அனைவரும் மின்சாரப் பிண எரியூட்டியை நோக்கிச் சென்றால், தங்கள் பிழைப்பு என்னவாகும் என்று ஒரு சாரார், 'எந்தத் தங்குதடையுமின்றி நேரடியாக மோட்சம் செல்ல வேண்டுமானால், கரையில் எரியூட்டுவதுதான் முறையானது ' எனப் பிரசாரம் செய்கிறார்கள். இவ்வாறு தகனம் செய்ய ரூ.600 செலவாகிறது" என்று துல்லியமாக எடுத்துச் சொல்கிறார்.

கங்கை இவ்வாறு களங்கப்படுவதைக் கண்ட நம்முடைய கவிஞர் ஒருவர் "மங்கைக்குச் சூதகம் என்றால், கங்கைக்குப் போவாள், கங்கைக்குச் சூதகம் என்றால் எங்கே போவாள்?" என்று வேதனையோடு கேட்டார். கங்கை நீர் பல்வேறு வழிகளில் நச்சுப்படுவதை நேரில் கண்ட மேனாட்டு அறிஞர் மார்க் ட்வைன் அதை ஆதங்கத்தோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவரை அழைத்துக்கொண்டு வந்த வழிகாட்டி(கைடு) சாமர்த்தியமாக, "எவ்வளவு அசுத்தங்கள் கலந்தாலும், இந்தக் கங்கைநீரில் ஒரு கிருமி கூட வாழாது" என்றான். நகைச்சுவையைக் கையாளுவதில் வல்லவராகிய மார்க் ட்வைன், "ஆமாம் மானமுள்ள எந்தக் கிருமியும் இந்தநீரில் உயிர் வாழாது தான்" என்று அவனுக்குப் பதில் சொன்னாராம். இந்திய நாட்டில் நீர் மாசுபடுவதற்குக் கங்கைக்கரை, ஒரு பானைச்சோற்றுக்கு ஒரு சோறு ஆகும்.

## காற்று மாசுபடல்

வளர்ச்சி பெற்ற நாடுகளோடு வளர்ச்சி பெறும் நாடுகள் போட்டியிடுவதால், தொழிற்சாலைகளின் உற்பத்தி தவிர்க்க முடியாத ஒன்றாக ஆகிவிடுகிறது. தொழிற்சாலைகளின் வளர்ச்சி தவிர்க்க முடியாத ஒன்று என்றால், அவற்றிலிருந்து வெளியேறும் கரியமில வாயுவும் தவிர்க்கமுடியாத ஒன்றுதான். தொழிற்சாலைகள் மட்டுமல்ல எரிஎண்ணெய், நிலவாயு, நிலக்கரியைப் பயன்படுத்துகின்ற அனல் மின்நிலையங்களும் கரியமில வாயுவை வெளிவிடுகின்றன. இந்தக் கரியமிலவாயு நாம் சுவாசிக்கும் காற்றைக் கெடுப்பதோடு, பூமியைக் கெடுத்து, இந்த மண்ணிலேயே பசுமைக்குடில் (Green House Effect) என்ற விளைவை உண்டாக்குகிறது. இந்தப் பசுமைக்குடில் தான், பூமிலிருந்து வெப்பம் வெளியேறுவதை மேலும் மேலும் தடுத்து, பூமியில் வெப்பம் அதிகரிக்கின்ற நிலையை ஏற்படுத்தியுள்ளது.

கரியமில வாயு மட்டுமன்று, ஏர்கண்டிசன்— ரெப்ரிஜரேட்டர் நுரைப்பொருள் தயாரிப்பு ஆகியவற்றில் பயன்படுத்தப்படும் 'குளோரோபுளோரோ' கார்பன்கள், மாட்டின் வயிற்றிலிருந்து வெளிப்படுகிற மீதேன் வாயு, செயற்கை உரங்கள் வெளிப்படுத்துகிற நைட்ரஸ் ஆக்சைட்டுகள் போன்றவையும் 'பசுமைக்குடில்' வாயுக்கள் எனக் கணக்கிடப்படுகின்றன. கார், லாரி, போன்ற வாகனங்கள் 'பசுமைக்குடில்' விளைவை ஏற்படுத்துவதில் கணிசமான பங்கு வகிக்கின்றன. டெல்லி மாநகரம் ஒரு நாளைக்குச் சராசரி 1000 டன், பெங்களூர் சராசரி 264 டன், மும்பை 574 டன், சென்னை 279 டன் கரியமில வாயுவையும் வெளியிடுவதாக உலக வங்கியின் அறிக்கை சொல்லுகிறது. வளர்ச்சி பெற்ற நாடுகள்—வளருகின்ற நாடுகள் — மூன்றாம் உலக நாடுகள் ஆக எல்லா நாடுகளும் சேர்த்து ஆண்டுக்கு 570 கோடி டன் கரியமில வாயிவைக் காற்றில் கலக்கச் செய்வதாக ஐ.நா. மதிப்பீடு கூறுகிறது.

இந்த 570 கோடி டன் கரியமில வாயுவில் 75 விழுக்காடுகள் வளர்ச்சியடைந்த நாடுகளால் வெளியேற்றப்படுகின்றன. உலகில் காற்று மண்டலத்தில் கலக்கும் வாயுவில் கால் பங்கை அமெரிக்கா தான் உற்பத்தி செய்கிறது. என்றாலும், இந்த அபாயத்தைத் தடுக்க அமெரிக்காவில் காற்றுத் தூய்மைச் சட்டம் (Clean Air act) நடைமுறையில் இருக்கின்றது. ஐரோப்பிய நாடுகள் 'கார்பன் வரி' விதிக்கத் தயாராகிவிட்டன. மேலும், வளர்ச்சியடைந்த நாடுகளில் ஒரு தொழிற்சாலையைக் கட்டுவதற்குத் திட்டமிடும் பொழுதே அதிலிருந்து

வெளிவரும் நச்சுக்காற்றைத் தடுப்பதற்கும் வழிகள் வகுக்கப்படுகின்றன. நம்முடைய நாட்டில் இனிமேலாவது அந்தச் சிந்தனை வரவேண்டும். கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பு போபாலில் நடந்த நச்சுவாயு கசிவு பலருக்கு நினைவிருக்கலாம்.

போபாலில் உள்ள யூனியன் கார்பன் நிறுவனத்தைப் போன்ற வர்ஜனியாவிலும் ஒரு நிறுவனம் உண்டு. ஆனால், அங்கு எந்த விபத்தும் இதுவரை ஏற்படவில்லை. ஏனென்றால், அப்படி ஒருவேளை நச்சுவாயு கசிவு ஏற்பட்டால், அதைத் தடுப்பதற்கு நான்கு அடைப்பான்கள் (ஒன்றில்லாவிட்டால், மற்றொன்று என்ற வகையில்) அங்கு இருக்கின்றன. இங்கு இருந்தது ஒன்று தான்; விபத்து அன்று அதுவும் வேலை செய்யவில்லை. கோயம்புத்தூரில் ஆடை ஆலைகளிலிருந்து பருத்திப் பிசிர்கள் பறந்து செல்வதைத் தடுப்பதற்காக 'லிபிக் கன்டென்சர்கள்' உண்டு. ஆனால், அவற்றை யாரும் இயக்குவதில்லை. மலேசியாவில் பகல்நேரத்தில் தனியார் லாரிகள் இயங்கக்கூடாது. பொதுப்பணித்துறை லாரிகள் மட்டும் அவற்றுக்கென ஒதுக்கப்பட்ட தடத்தில் மட்டுமே இயங்கலாம். இரவு நேரத்தில் சரக்குந்துகள் இயங்கத்தடையில்லை. ஆனால், அனைத்துச் சரக்குந்துகளுக்கும் புகைபோக்கி மேல்நோக்கியே இருக்கவேண்டும். இத்தகைய விழிப்புணர்வை விரைவில் நம்மவர்களும் பெற்றாக வேண்டும்.

இவ்வாறாக, நிலம்—நீர்—காற்று மாசுபடுவதால் ஏற்படப் போகும் விளைவுகள் எப்படியிருக்கும் என்று எண்ணிப் பார்த்தால், நாம் எத்தகைய அபாயத்தில் இருக்கின்றோம் என்பதை உணரமுடியும் பசுமைக்குடில் தன் வேலையைச் செய்யத் தொடங்கினால், பூமியில் படிப்படியாக வெப்பநிலை அதிகரிக்கும். அதனால், வட—தென் துருவப் பகுதிகளில் படிந்துள்ள மலைப்பாறைகளைப் போன்ற பனிக்கட்டிகள் உருகத் தொடங்கும். அதன் காரணமாகக் கடல் மட்டம் உயரும். இதனால் இந்துமாக்கடல், பசிபிக் கடல், அட்லாண்டிக் கடல் போன்றவற்றிலுள்ள பல தீவுகள் மூழ்கிப் போய்விடும். இந்தியா, சீனா, எகிப்து போன்ற நாடுகளில் வளமிக்க டெல்டா பகுதிகள் வறண்டு போய்விடும். கடல் மட்ட உயர்வினால் ஏராளமான சொத்துக்கள் அழிவதோடு, கோடிக்கணக்கான மக்கள் இடம் பெயர நேரிடும்.

கடல்மட்டம் உயர்வதால், பருவநிலை பாதிக்கப்படும். உலகில் ஓசோன் மண்டலத்தில் பொத்தல்கள் விழுவதால், தாயின் கருவறையில் குழந்தைகளுக்குக் கூட சருமநோய்கள் வரும். மிதமான தட்ப

வெப்பத்தில் வாழக்கூடிய உயிரினங்கள் விலங்குகள், செடிகொடிகள் எல்லாம் அழிந்துபோகக் கூடிய வாய்ப்புண்டு. காற்றுக்கும் கதிரவனுக்குமுள்ள தொடர்பைத் தீர்க்கதரிசனமாக உணர்ந்த மகாகவி பாரதி

"காற்றுக்கும் சுடருக்கும் எவ்வளவு உறவு?
காற்றின் வடிவே திரியென் றறிவோம்,
ஒளியின் வடிவே காற்றுப் போலும்
ஒளியே, நீ இனியை"

என்று பாடியும், நாம் பாடம் பெற்றோமில்லை.

மாசுபடுவதாலும் தூசுபடுவதாலும் ஏற்படக்கூடிய அபாயங் களை அடுக்கிக் கொண்டு போவதைக் காட்டிலும், சுற்றுப் புறச் சூழலின் இன்றியமையாமையை எண்ணிப் பார்த்து, விழிப்புணர்ச்சி பெறுதல் நல்லது. முதலில் வல்லுநர்களுக்கும்—ஆய்வாளர்களுக்கும் இடையில் மட்டும் இடம் பெற்றிருக்கின்ற விழிப்புணர்ச்சி, இந்நாட்டின் கிராமவாசிகளுக்கும்—ஆதிவாசிகளுக்கும் போய்ச் சேர வேண்டும். ஏனென்றால், மரங்களை விறகுக்காக வெட்டுபவர்களும், மாடுகளைக் குடிநீரில் குளிப்பாட்டுபவர்களும் அவர்கள்தாம். இரண்டாவதாக, குழந்தைப் பருவத்திலிருந்தே சுற்றுப்புறச் சூழல் பற்றிய கருத்து கற்பிக்கப் படவேண்டும் என்பதால், தொடக்கக்கல்வி, உயர்நிலைக் கல்வியிலேயே அது பாடப்பகுதியில் இடம் பெயற வேண்டும். எழுத்தறிவில்லா மக்களுக்கும் இவ் விழிப்புணர்வு அவசியம் என்பதால், அறிவொளி இயக்கத்துக்குத் தனித்திட்டங்கள்—செயலகங்கள் வகுக்கப்பட்டனபோல், இதற்கும் அமைக்கப்பட வேண்டும்.

ஒருநாளின் முக்கியமான நேரத்தைத் தகவல்—தொடர்பு சாதனங்கள் சுற்றுப்புறச் சூழலுக்கென ஒதுக்க வேண்டும். கலை—இலக்கியத்தைச் சார்ந்தவர்கள் சுற்றுப்புறச் சூழலை அடிப்படையாக வைத்துத் தங்கள் படைப்புக்களைப் படைக்க வேண்டும். ஒட்டு மொத்தமாகச் சொன்னால், போர்க்கால அடிப்படையிலே அணுகப்பட வேண்டிய ஒன்று, சுற்றுப்புறச் சுழலும் அதன் பாதுகாப்புமாகும்.

# திருக்குறளும் விவிலியமும்

*மேர்சசு மைக்கேல் பாரடே*

இன்றைக்குச் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 16 ஆம் நூற்றாண்டில் ஈழத்தை ஆண்டு வந்த பூவலிக்கவாகு (1521–1551) எனும் சிங்கள அரசனுடைய அரண்மனையில், போர்த்துக்கீசிய அறிஞரும், விவிலியத் திருமறைச் செல்வருமாகிய யூவான் தேவில்லா கொன்தே (John de vila Conde) என்பவர் விவிலியத் திருமறையைப் பற்றி விளக்கவுரை ஆற்றுகையில், தம்முடைய கொள்கைகளுக்குத் திருக்குறள் சான்றாக விளங்குவதாக எடுத்துரைத்ததாக வரலாற்றுக் குறிப்பு ஒன்று கூறுகிறது. "நீங்கள் மறைவாக ஒலித்திருக்கும் வள்ளுவரின் நூலைப் படித்துப் பார்த்தால், அங்கு நான் கூறும் கிறித்துவச் சத்தியங்களையும் மற்றும் ஏனைய கிறித்துவக் கொள்கைகளையும் காண்பீர்கள்" என்று சிங்கள மன்னன் முன்னிலையில் அவர் இயம்பினார். 16ஆம் நூற்றாண்டிலேயே ஈழ நாட்டையும் இந்தியத் தமிழ் நாட்டையும் நன்கறிந்த ஒரு போர்த்துக்கீசிய கிறித்துவப் பெரியார், விவிலியத்துக்கும் திருக்குறளுக்கும் ஒப்புமை கண்டு இருப்பது வியத்தற்குரியது. அவ்வாறே லியோ டால்ஸ்டாய் எனும் ருசிய நாட்டைச் சேர்ந்த மாபெரும் இலக்கியப் படைப்பாளர், திருக்குறளில் 'இன்னா செய்யாமை' என்னும் அதிகாரத்தில் வரும் ஆறு குறள்களைத் தம் நெஞ்சும் கவர்ந்த குறள்களாகக் கொண்டு அவற்றை விவிலியக் கருத்துக்களுடன் ஒப்பிட்டுப் பேசுகிறார். சான்றாக,

**அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்**
**தந்நோய் போல் போற்றாக் கடை**

என்னும் குறளில் வரும் கருத்து, கிறித்துவ சமய அருள் கொள்கையோடு (Doctrine of Grace) ஒத்துள்ளதாகக் கருதுகின்றார். இவ்வாறு உலகப்பொதுமறை எனப் போற்றப்படும் தமிழ் மறையாம்

திருக்குறளையும், உலகப் பெருஞ்சமயமான கிறித்தவத்தின் திருமறையாம் விவிலியத்தையும் ஒப்பிட்டுக் கண்டோரும், காண்போரும் நம் நாட்டிலும் பிற நாடுகளிலும் எண்ணற்றோர் ஆவர்.

பேக்கன் என்னும் அறிஞர் நாம் கற்க வேண்டிய நூல்களை வகைப்படுத்துகையில், அவ்வப்போது கற்று மறத்தற்குரிய நூல்கள் (Books for Hour), எப்போதும் இடைவிடாது ஓதி உணர்ந்து ஒழுக வேண்டிய நூல்கள் (Books for ever) எனப் பாகுபடுத்தியதாகக் கூறுவர். திருக்குறளும் விவிலியமும் இரண்டாம் வகையைச் சேர்ந்தவை. எனக் கூற வேண்டுவதில்லை. இவ்விரு நூல்களின் கருத்துக்களையும் உண்மைகளையும் சுருங்கிய அளவில் நாம் சற்றே ஒப்பிட்டுக் காணு முன், இவற்றிடையே உள்ள சில அடிப்படை வேறுபாடுகளையும் மனங்கொள்வது பொருந்தும். விவிலியம், இறைவனுடைய இயல்புகளையும் உள்ளத்தையும் மனித குலத்துக்கு வெளிப்படுத்தி, மனிதன் இறைவனை அறியும் -அடையும் மார்க்கத்தைக் காட்டுதலை முதன்மை நோக்கமாகக் கொண்டது. திருக்குறளோ, மனிதன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தற்குரிய பொது அறங்களைப் பல்லாற்றானும் பகர்ந்திட எழுந்தது. பொதுவாக விவிலியம், குறிப்பிட்ட ஒரு சமயத்தாருக்குரிய மறை நூலாகக் கருதப்படுவது. திருக்குறளோ தமிழில் எழுதப்பட்டதாயினும் அனைத்து நாட்டவருக்கும் அனைத்துச் சமயத்தவருக்கும் உரிய நீதி நூலாகப் போற்றப்படுவது. மேலும் திருக்குறள் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்ட ஒரு தனி நூலாகும். விவிலியமோ பழைய ஏற்பாடு புதிய ஏற்பாடு என இரு பெரும் பிரிவுகளாகப்பகுக்கப்பட்டு நாற்பதுக்கும் மேற்பட்ட ஆசிரியர்களால் பல நூற்றாண்டு கால இடைவெளியில் எழுதப்பட்ட ஏறத்தாழ எழுபது நூல்களின் தொகுதியாகும். எனினும் இவ்விரு நூல்களுமே காலத்தால் அறப்பழமை வாய்ந்தனவாகவும் உலகின் தொன்மையான நாகரிகங்களாகிய யூத நாகரிகத்திலிருந்தும் தமிழ் நாகரிகத்திலிருந்தும் எழுந்தனவாகவும் விளங்குகின்றன. இரு பெரு நூல்களும் வாழ்க்கைப் பெருங்கடலில் திசை தெரியாது தவிக்கும் மனிதக் கப்பல்களுக்கு அன்றும் இன்றும் என்றும் வழிகாட்டி ஒளிகூட்டும் கலங்கரை விளக்கங்களாய் ஒளிர்கின்றன.

## திருக்குறள் விவிலியம் – ஒப்பீடு

இரு பேரிலக்கியங்களை ஒப்பிடுகையில், பல்வேறு அணுகு முறைகள் பயன்படுத்தப்படலாம். இரு நூல்களில் அமையும் கதைகள்

நிகழ்ச்சிகள், வரலாறுகள் போன்றவற்றையும், அவற்றுள் பொதிந்து கிடக்கும் உட்கருத்துக்களையும் ஒப்பிடுதல் ஒரு முறை. வெளிப்படையாகக் கூறப்படும் கருத்துக்களை ஒப்பு நோக்குதல் வேறொரு முறை. இங்கு இக்கட்டுரையின் இட அளவு கருதி இரு பிரிவுகளாகச் சில செய்திகளைக் காண்போம்.

## 1. விவிலியம் கூறும் பொது அறங்களும் திருக்குறட் கருத்துக்களும்

*(அ) பத்துக் கட்டளைகளும் திருக்குறளும்.*

விவிலிய நூலின் தொடக்கத்திலேயே யூத சமுதாயத்துக்கு வழி காட்டுதலாகவும் வாழ்வு அறங்களாகவும் இறைக்கட்டளை களாகவும் பல்வேறு விதிகள் விவிலியத்தின் ஆரம்ப நூல்கள் நான்கில் (யாத்திராகமம், லேவியராகமம், எண்ணாகமம், உபாகமம்) வகுத்துரைக்கப்படுகின்றன. இவற்றுள் முதன்மையானவை மோசே முனிவர் வழியாகக் கடவுள் வழங்குகிற பத்துக்கட்டளைகளாகும். இப்பத்துக் கட்டளைகளுள் பிந்திய ஐந்து கட்டளைகள் திருக்குறளில் சில அதிகாரங்களாக விரித்துரைக்கப்படுவதை நாம் காணலாம். 'கொலை செய்யாதிருப்பாயாக' என விவிலியம் கூற, அதே உண்மையைக் 'கொல்லாமை' என ஒரு தனி அதிகாரமாக வள்ளுவர் பேசுகிறார். 'விபசாரம் செய்யாதிருப்பாயாக' என்பது விவிலியம். 'பிறனில் விழையாமை' என்பது திருக்குறள் அதிகாரம். விவிலியத்தில் 'களவு செய்யாதிருப்பாயாக' என்பது, திருக்குறளில் 'கள்ளாமை' என்னும் அதிகாரமாக அமைகிறது. 'பிறருக்கு விரோதமாக பொய் சாட்சி சொல்லாதிருப்பாயாக' என விவிலியம் பேசும் கருத்தை, 'வாய்மை' எனும் அதிகாரத்தில் வள்ளுவர் விளக்குகின்றார். 'பிறரது பொருளை இச்சியாதிருப்பாயாக' எனும் விவிலியக் கோட்பாடு திருக்குறளில் 'வெஃகாமை' எனும் அதிகாரத்தில் பேசப்படுகிறது. "உன் தந்தையையும் தாயையும் மதித்துப் போற்றுவாயாக" எனும் விவிலியக் கட்டளை, திருக்குறளில் "மகன் தந்தைக்காற்றும் உதவி" என வரும் குறளால் சுட்டப்படுகிறது. மிகத் தொன்மை வாய்ந்த விவிலிய நூலில் எழுதப்பட்டுள்ள இவ்வறக் கோட்பாடுகள், பின்னர் உலகில் பல்வேறு மொழிகளில் எழுந்த பல்வகை அற இலக்கியங்களுக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தவை என மறை நூலறிஞர் மொழிவர். இக் கோட்பாடுகள் பழந்தமிழ் மறையாம் திருக்குறளின் கருத்துக்களோடு ஒன்றுபட்டிருப்பது திருக்குறளின் சிறப்பைக் காட்டுகிறது.

இதனாற்றான் சார்லஸ் இ. கவர் என்பவர் 'திருக்குறளின் அறக்கோட்பாடுகள் பல யூதருடைய பத்துக்கட்டளைகளைப் போன்று உறுதியான கட்டுப்பாட்டுடன் அமைந்துள்ளன' எனக் கூறுகின்றார்.

மேலும் இக்கட்டளைகளின் விரிவாக பழைய ஏற்பாட்டின் பிற நூல்களில் பேசப்படும் வேறுபல அற உரைகளும் அறிவுரைகளும் திருக்குறள் கருத்துக்கள் பலவற்றை எதிரொலிப்பனவாக உள்ளன. ஒரு சில சான்றுகளை மட்டும் காண்போம்.

செல்வர்களிடம் சேர்ந்த பொருள் அவர்களுக்கு மட்டுமே அல்லாமல் பிறருக்கும் பயன்படவேண்டும் என்பதை 'ஒப்புரவு' எனும் அதிகாரத்தில் வள்ளுவர் வலியுறுத்திப் பேசுகிறார். அதனை விளக்க அவர் பயன்படுத்தும் மூன்று உவமைகளான ஊருணி, பயன்மரம், மருந்துமரம் ஆகியன நாம் அறிந்தவை. வள்ளுவர், 'இலர் பலராகிய காரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர்' என்ற குறளில் பொருளுடையார், இல்லாருக்காகத் தியாகம் செய்யவேண்டும் எனும் கருத்தை நுட்பமாக உணர்த்துகிறார். விவிலிய நூலிலும் செல்வர்களது பொருள் மக்கள் பலருக்கும் குறிப்பாக வறியவருக்குப் பயன் படுவதற்காகப் பல்வேறு விதிகள் பொருளுடையாருக்கு விதிக்கப்பட்டன. வாரத்தில் ஆறு நாள் வேலை செய்து ஏழாம் நாள் ஓய்வு கொள்ளும் யூதர்கள், தங்கள் வயலிலும் ஆறு ஆண்டுகள் உழுது பயிரிட்டு அறுவடை செய்த பின் ஏழாம் ஆண்டு வயலிலே பயிர் செய்யாது நிலத்திற்கு ஓய்வு அளிக்க வேண்டுமென விவிலியத்தில் கட்டளையிடப்பட்டுள்ளது. இது நிலத்தின் செழுமையைப் பாதுகாக்க ஏற்றதாக இருப்பது மட்டுமல்லாமல், நிலத்தில் தானே விளைந்ததை வறியவர் அறுவடை செய்து எடுத்துக்கொள்ளவும் வாய்ப்பளித்தது. வயலில் சிந்திக் கிடப்பவற்றையும் மீந்து போனவற்றையும் வறியவர்க்காகவே விட்டுவிட வேண்டுமென்று யாத்திராகமம், லேவியராகமம், உபாகமம் ஆகிய விவிலிய நூல்கள் விளக்கி உரைக்கின்றன. மேலும் ஈகையின் பெருமையை வள்ளுவர் பல்லாற்றானும் வலியுறுத்திப் பேசுவதைக் குறள் கற்றோர் நன்கு அறிவர். 'ஈதல் இசைபட வாழ்தல்' எனவும் 'ஈத்துவக்கும் இன்பம்' எனவும் பலவாறாக வள்ளுவர் பேசுவார். விவிலியத் திருமறையிலும் ஏழைகட்கு இரங்குவது பற்றியும் அதனால் கிட்டும் இறையருள் பற்றியும் விவிலியத்தின் ஆரம்ப நூல்களும் நீதிமொழிகள், சங்கீதங்கள் முதலிய பிற நூல்களும் பன்னிப்பன்னிப் பேசுகின்றன. குறிப்பாக, லேவியராகமத்தில் யூபிலி' என்னும் பெருவிழாவைப் பற்றிச்

சொல்லப்படுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை கொண்டாடும் இவ்விழாவின் போது நிலம் திரும்பவும் விற்றவனின் உரிமையாகும். ஆகவே நிலத்தை விற்போரும் வாங்குவோரும், அடுத்த யூபிலி ஆண்டு வரை பயன்படுத்திக் கொள்வதற்காகவே விற்பர், வாங்குவர். நில மனைத்தும் கடவுளுக்குரியது. அதனை அறுதியாக விற்குமாறில்லை என்பது இதன் உட்கருத்து. நிலமனைத்தும் ஒரு சிலரிடமே சென்று சேர்ந்து விடுவதைத் தடுப்பதற்காக கொடுக்கப்பட்ட தெய்வீக விதியே இது எனலாம்.

இவ்வாறே வாணிபம் செய்வாரைப்பற்றி திருவள்ளுவர் மிக அழகாக ஒரு குறளில் குறிப்பிடுகிறார்.

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தம போற் செயின்.**

இதனை எதிரொலிக்கும் வண்ணமாக விவிலிய நூல்களிலும் வணிகர் பின்பற்ற வேண்டிய பல அற நெறிகள் பற்றி லேவியராகமம் எனும் நூல் விரித்துரைக்கின்றது. ஒரு சில கருத்துக்கள் கீழ் வருமாறு:

"நீட்டல் நிறுத்தல், கொள்ளல் ஆகிய அளவுகளில் நேர்மையைக் கடைபிடியுங்கள். தராசும் படிக்கல்லும் மரக்காலும் அளவு சரியான படியும் உங்களிடம் இருக்கட்டும்" (லேவி 19:35, 36) "பெரியதும் சிறியதுமான ஏமாற்று எடைக்கற்களை உன்பையில் வைத்திருக்காதே. பெரியதும் சிறியதுமான ஏமாற்று முகத்தல் அளவைகளை உன்வீட்டில் வைத்திருக்காதே. நிறைவான நேர்மையான எடைக்கற்கள் உன்னிடம் இருக்கட்டும் .... நேர்மையற்று நடப்போர் அனைவரும் உன் கடவுளாகிய ஆண்டவருக்கு அருவருப்பானவர்."

மேலும் 'நடுவு நிலைமை' என்ற பண்பைக் குறித்து யாத்திராகமம் விரிவாகப் பேசுகிறது. குறிப்பாக பொதுமக்களது வழக்குகளை விசாரிப்பதற்காக அரசரால் நியமிக்கப்பட்ட அலுவலர்களும், வழக்கு மன்றங்களில் சான்று கூறுவோரும் எவ்வாறு நடு நிலைமையே பேணியும் பொய்யுரையாதும் கையூட்டு பெறாதும் தம் கடமைகளை ஆற்ற வேண்டும் என்பதை இந்நூல் பல்லாற்றானும் விளக்கி வலியுறுத்திப் பேசுகிறது. இந்நூலின் 23 ஆம் அத்தியாயத்திலும் லேவியராகமம் 19 ஆம் அத்தியாயத்திலும் சொல்லப்படும் பல கருத்துக்கள், பின்வரும் குறட்பாக்களின் மறு பதிப்புகள் போல விளங்குகின்றன.

சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.

எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
இன்றே ஒழிய விடல்.

## ஆ) இறைவாக்கினர் மொழிகளும் திருக்குறளும்

விவிலியத் திருமறையில் இறைவனின் அருளாற்றலால் உந்தப்பட்டு சமுதாயத்துக்கு இறைவனின் செய்திகளையும், மக்கட் சமுதாயத்தினர் இறை நெறியும் அறநெறியும் தவறி ஒழுகுங்கால் இறைவனது எச்சரிப்புகளையும் எடுத்தோதும் இறையடியார்கள் இறைவாக்கினர் அல்லது தீர்க்கதரிசிகள் என அழைக்கப்படுவர். இவர்களது கூற்றுக்களாக விவிலியத் திருமறையில் பெரிதும் சிறிதுமாக பல நூல்கள் அமைந்துள்ளன. இவர்களது அறவுரைகளும் அறை கூவல்களும் கண்டன மொழிகளும் பல வேளைகளில் வள்ளுவரது வாய்மொழிகளை ஒத்து விளங்குகின்றன. சான்றாக சகரியா என்னும் இறைவாக்கினர், 'நீங்கள் கடைப்பிடித்து ஒழுக வேண்டியவை இவையே ஒருவரோடொருவர் உண்மை பேசுங்கள்; உங்கள் நகர வாயில்களில் நீங்கள் அளிக்கும் தீர்ப்பு நீதியாகவும் நல்லுறவுக்கு வழி கோலுவதாயும் இருக்கட்டும்; ஒருவருக்கு எதிராக மற்றொருவர் தீமை செய்ய மனதாலும் நினைக்க வேண்டாம். பொய்யாணையிடுவதை விரும்பாதீர்கள்; ஏனெனில் இவற்றையெல்லாம் நான் வெறுக்கிறேன் என்கிறார் ஆண்டவர்' எனக் கூறுவது வள்ளுவரது பின்வரும் குறட்பாக்களை நினைவூட்டுகின்றது.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

உள்ளத்தால் உள்ளலும் தீதே – பிறர்பொருளைக்
கள்ளத்தாற்கள்வேம் எனல்.

அவ்வாறே ஓசியா எனும் இறைவாக்கினர் 'மதுவும் திராட்சை ரசமும் அறிவைக் கெடுக்கும்' எனக் கூறுவது.

உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகுவார்

என்ற திருக்குறளை நினைவுபடுத்துகிறது.

மக்கள் துணிகரமாக இறைவன் வகுத்த அறவழிகளை விட்டு விலகி வாழும் போது இறைவனின் சினத்திற்கு இலக்காவர் என்ற கருத்து இறைவாக்கினரால் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. திருவள்ளுவர் இக்கருத்தினை வெளிப்படையாகக் கூறாவிட்டாலும் சூசகமாக இந்த எச்சரிப்பைத் தருவதற்குத்தவறவில்லை.

பிறர்க் கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.
மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்
அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு.

ஆகிய குறட்பாக்களின் கருத்துக்கள், மீகா என்னும் இறைவாக்கினரின் பின்வரும் வாசகத்தில் எதிரொலிக்கின்றன.

"தங்கள் படுக்கைகளின் மேல் சாய்ந்து தீச் செயல் புரியத் திட்டமிட்டு கொடுமை செய்ய முயல்பவர்களுக்கு ஐயோ கேடு! பொழுது புலர்ந்தவுடன் தங்கள் கைவலிமையினால் அவர்கள் அதைச் செய்து முடிக்கின்றார்கள்
..... ஆதலால் ஆண்டவர் கூறுவது இதுவே; இந்த இனத்தாருக்கு எதிராகத் தீமை செய்யத் திட்டமிடுகிறேன்."

என்பிலதனை வெயில் போலக் காயுமே
அன்பிலதனை அறம்.

என்ற குறட்கருத்து, "இதோ சூளையைப் போல் எரியும் அந்த நாள் வருகின்றது. அப்போது ஆணவக்காரர், கொடுமை செய்வோர் அனைவோரும் அதனுள் போடப்பட்ட சருகாவர்; வரப்போகும் அந்த நாள் அவர்களுடைய வேரையோ, கிளையையோ விட்டுவைக்காது; முற்றிலும் சுட்டெரித்துவிடும்" என்னும் மல்கியா இறைவாக்கினரின் கூற்றுபோலவே தொனிக்கிறது.

வறியோரை வதைக்கும் வலியோரை எச்சரித்து ஆமோஸ் என்னும் இறைவாக்கினர் பேசுகிறார்:

"நீங்கள் ஏழைகளை நசுக்கி அவர்களிடம் தானிய வரியாக வாங்கியதைக் கொண்டு நன்கு செதுக்கிய கற்களால் வீடு கட்டினீர்கள்; அந்த வீடுகளில் நீங்கள் வாழப் போவதில்லை. அருமையான திராட்சைத் தோட்டங்களை அமைத்தீர்கள்; அவ்வதரும் திராட்சை ரசத்தை நீங்கள் குடிக்கப் போவதில்லை; உங்கள் குற்றங்கள் எவ்வளவு மிகுதியானவை என்றும் உங்கள் பாவங்கள் எத்துணை கொடியவை என்றும் நான் அறிவேன்; நல்லாரைத் துன்புறுத்துகிறீர்கள்; கையூட்டு வாங்குகிறீர்கள். நகர் வாயிலில் வறியோருக்கு நீதி வழங்க மறுக்கிறீர்கள்". இதே குரலில் புதிய ஏற்பாட்டில் யாக்கோபு என்னும் இறை அடியாரும் இவ்வாறு எழுதியுள்ளார். "செல்வர்களே, சற்று கேளுங்கள்: உங்களுக்கு வரப்போகும் இழிநிலையை நினைத்து அலறி அழுங்கள்;.... உங்கள் வயலில் அறுவடை செய்த வேலையாட்களுக்குரிய கூலியைப் பிடித்துக் கொண்டீர்கள்; அது கூக்குரலிடுகிறது. அறுவடை செய்தவர்களின் கூக்குரல் படைகளின் ஆண்டவருடைய செவிக்கு எட்டியுள்ளது" என்று கடிந்துரைக்கிறார். இக்கருத்துக்கள் வள்ளுவப் பெருந்தகையின் கீழ்க்காணும் குறட்பாக்களில் எதிரொலிக்கின்றன அல்லவா?

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

உண்மையான நோன்பு பற்றி விளக்கும்போது ஏசாயா என்னும் இறைவாக்கினர் "பசித்தோர்க்கு உங்கள் உணவைப் பகிர்ந்து கொடுப்பதும், தங்க இடமில்லா வறியோரை உங்கள் இல்லத்திற்கு அழைத்து வருவதும், உடையற்றோரைக் காணும்போது அவர்களுக்கு உடுக்கக் கொடுப்பதும் உங்கள் இனத்தாருக்கு உங்களை மறைத்துக் கொள்ளாதிருப்பதும் அன்றோ நான் விரும்பும் நோன்பு?" என்று இறைவன் கூறுவதாகக் கூறுவது,

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்

என்ற திருக்குறட் கருத்தின் இன்னொரு வடிவமே எனலாம்.

இறைவாக்கினர் 'தீமை செய்வோர்க்குச் சிறைத் தண்டனை கிட்டும் எனத் துணிந்து முழங்கினும் இவ்வுலகில் ஏன் சில சமயங்களில்

தீமை மேலோங்குகிறது? நன்மையின் முழு முதல் வடிவமாக விளங்கும் கடவுள் ஏன் தீமையை இவ்வுலகில் அனுமதிக்கின்றார் என்ற வினா அவர்கள் உள்ளத்திலும் எழாமல் இல்லை. இதனை ஆபகூக் இறைவாக்கினர் வெளிப்படுத்துகிறார். "தீமையைக் காண நாணும் தூய கண்களை உடையவரே, கொடுமையைப் பார்க்கத் தாங்காதவரே; கயவர்களை நீர் ஏன் பார்த்துக் கொண்டே இருக்கின்றீர்? பொல்லாதவர் தம்மைவிட நேர்மையாளரை விழுங்கும் போது நீர் ஏன் மௌனமாய் இருக்கின்றீர்?" என்பன அவரது அங்கலாய்ப்பின் சொற்கள். வள்ளுவரும் இதே மன உணர்வில் தான்

> அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
> கேடும் நினைக்கப்படும்.

எனப் பாடினார் எனக் கருதலாம்.

## (இ) விவிலியத்தின் நீதிமொழிகளும் திருக்குறளும்

விவிலியத் திருமறையிலேயே ஒரு தனிவகை இலக்கியமாக அமைவது, சாலமோன் என்ற மெய்யறிவு மிக்க பேரரசனும் எபிரேய சமுதாயத்தின் ஏற்றமிகு ஞானியர் சிலரும் உதிர்த்த பொன் மொழிகளின் தொகுப்பாக அமையும் 'நீதி மொழிகள்' என்ற நூல், பல்வேறு பொருட்களைப் பற்றிய ஞானமொழிகளாக – தத்துவச் சிந்தனைகளாக அமையும் இந்நூல் வாசகங்கள் பல, வள்ளுவரது குறள் மொழிகள் பலவற்றை ஒத்து விளங்குகின்றன. பேராசிரியை காமாட்சி சீனிவாசன் என்பார் தமது திருக்குறளும் விவிலியமும்' எனும் நூலில் இந்த ஒப்புமைகளை நன்கு பட்டியலிட்டுக் காட்டுகிறார். அவற்றுள் சில கீழே தரப்படுகின்றன.

| நீதி மொழிகள் | திருக்குறள் |
|---|---|
| 1. வேலை செய்யாத கை வறுமையை வருவிக்கும். விடாமுயற்சியுடையோரின் கையோ செல்வத்தை உண்டாக்கும் (10.4) | மடியுளாண்மாமுகடி என்ப மடியிலான் தாளுளாள் தாமரையி னாள். |
| 2. ஒருவர் உரைக்கும் உண்மை என்றும் நிலைக்கும்; பொய்யுரையின் வாழ்வோ இமைப் பொழுதே. (12.19) | உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உளன் |
| 3. ஞானமுள்ளவர்களோடுஉறவாடுகிறவர் ஞானமுள்ளவராவர்: மூடரோடு | நிலத்தியல்பான் நீர்திரிந்தற்றாகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு. |

நட்புகொள்கிறவர் துன்புறுவார். (13.20)

| | |
|---|---|
| 4. மேன்மை அடையத் தாழ்மையேவழி (15.33) | பணியுமாம் என்றும் பெருமை. |
| 5. தீச்செயலை அரசர்கள் அருவருப்பார்கள் ஏனெனில் நீதியே அரியணையின் உறுதியான அடிப்படையாகும் (16.12) | மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை: அஃதின்றேல் மன்னாவாம் மன்னர்க்கொளி |
| 6. பொன்னைவிட ஞானத்தைப் பெறுவதே மேல்; வெள்ளியை விட உணர்வைப் பெறுவதேமேல் (16.16) | கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு மாடல்ல மற்றையவை. |
| 7. பேசாதிருந்தால் மூடனும் ஞானமுள்ளவன் என்று கருதப்படுவான்: தன்வாயை மூடிக்கொள்பவன் அறிவுள்ளவன் எனப்படுவான். (17.28) | கல்லாதவரும் நனி நல்லர் கற்றார் முன் சொல்லாதிருக்கப் பெறின். |
| 8. பொய்பேசி ஒருவர் சேர்க்கும் பொருள். காற்றாய்ப் பறந்துவிடும்: அவரது உயிரையும் அது வாங்கிவிடும். | கலத்தால் பொருள் செய்தே மார்த்தல் பசுமட் கலத்துள்நீர் பெய்திரீ இயற்று. |
| 9.வாழ்வதும் நாவாலே, சாவதும் நாவாலே, வாயாடு வோர் பேச்சின் பயனைத்துய்ப்பர் (18.21) | ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் காத்தோம்பல் சொல்லின் கண் சோர்வு. |

## 2. கிறிஸ்துபெருமான் வாழ்வும் வாக்கும் திருக்குறளும்

இதுகாறும் விவிலியத் திருமறையின் முதற்பெரும்பிரிவாம் பழைய ஏற்பாட்டுக் கருத்துக்கள் பலவற்றோடு, திருக்குறட் கருத்துகளை ஒப்பிட்டுச் சிந்தித்தோம். இனி விவிலியத்தின் மையப் பொருளாக விளங்குவதும் புதிய ஏற்பாட்டில் விரித்துரைக்கப் படுவதுமான கிறிஸ்து பெருமானின் வாழ்வும் வாக்கும் எவ்வாறு திருக்குறளில் கூறப்படும் பேருண்மைகட்கு ஓர் இலக்கியமாய்த் திகழ்கின்றன எனக் காண முற்படுவோம். தெளிவாகச் சொல்வதெனில் குறளெனும் இலக்கணத்திற்கு, கிறிஸ்துவின் வாழ்வும் வாக்கும் இலக்கியமாக அமைந்திடுவதை இரண்டனையும் உற்றுநோக்குவார் உய்த்துணரலாம். கிறிஸ்து பெருமானின் போதனைகட்கும் திருக்குறட் போக்குக்கும் சில அடிப்படை வேறுபாடுகள் உளதெனினும், இரண்டும் தரும் நல்லறங்கள் ஒரே நோக்கில் வெளிப்படக் காணலாம். சான்றாக, — கிறிஸ்து பெருமானும் திருவள்ளுவரும் புறக் கோலங்களைக் கடிந்து, உள்ளத்தூய்மையையே பெரிதும் வலியுறுத்துகின்றனர். 'தூய்மையான உள்ளத்தார் பேறுபெற்றோர்; ஏனெனில் அவர்கள் கடவுளைக்

காண்பர்' எனவும், 'வாயினுள் செல்வது அல்ல வாயினின்று வெளிவருபவையே உள்ளத்திலிருந்து வருகின்றன. அவையே மனிதரைத் தீட்டுப்படுத்துகின்றன.... தீய எண்ணங்கள் உள்ளத்திலிருந்து வெளிவருகின்றன. இவையே மனிதரைத் தீட்டுப்படுத்துகின்றன' எனவும் கிறிஸ்துபிரான் மொழிந்தார். வள்ளுவரும் 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என மொழிந்தார். கிறிஸ்து பெருமான் பாரம்பரியச் சடங்குகளையும் பிற விதிகளையும் கூறாது அடிப்படையான அறங்களையே வலியுறுத்துவதை அவரது போதனைகளிற் காணலாம். ஒரு சில புறம்பான சடங்குகளைச் செய்துவிட்டு, உள்ளார்ந்த உண்மைகளை மறந்துவிடும் போக்கை அவர்கடிந்து பேசியுள்ளார். திருக்குறளும், ஆசாரக்கோவை போன்ற சில நூல்களைப் போல வெளிச் சடங்குகளை விரித்துப் பேசாது உள்ளுணர்வுகளையே தொட்டுப் பேசும்.

மேலும் கிறிஸ்து பெருமான் தம் வாழ்வு முழுவதும் அன்பையும் பிறரை மன்னித்து வாழும் தியாக உள்ளத்தையுமே போதித்தும் சாதித்தும் வந்தார். திருவள்ளுவரின் உள்ளக் கிடக்கையும் இதுவேயாதலை குறள் வழி உணரலாம். ஒரு சான்றாக, "உங்களிடத்தில் அன்பு செலுத்துவோரிடமே நீங்கள்அன்பு செலுத்துவீர்களானால் உங்களுக்கு என்ன கைம்மாறாகக் கிடைக்கும்?... நீங்கள் உங்கள் சகோதரர் சகோதரிகளுக்கு மட்டும் வாழ்த்து கூறுவீர்களானால் நீங்கள் மற்றவருக்கும் மேலாகச் செய்து விடுவதென்ன?" என்ற இயேசு பெருமானின் சிந்தனைவினா, 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு?' என வள்ளுவரிடம் எதிரொலிக்கிறது. இவ்வாறே, "முதலில் உங்கள் கண்ணிலிருந்து மரக்கட்டையை எடுத்தெறியுங்கள். அதன்பின் உங்கள் சகோதரர் அல்லது சகோதரியின் கண்ணிலிருந்து துரும்பை எடுக்க உங்களுக்குத் தெளிவாய்க் கண் தெரியும்" என்று இயேசு பிரான் இடித்துரைக்க, வள்ளுவரும் "ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கிற்பின் தீதுண்டோமன்னும் உயிர்க்கு?" என உருக்கமாக வினவுகிறார்.

இனி, இயேசுபெருமானின் போதனைகளிலும் மேலாக, அவரது வாழ்க்கையே திருக்குறள் அறத்தின் நடைமுறைப்பதிப்பாக விளங்கிடக் காணலாம். 'நண்பருக்காக உயிர் தருவதினும் பெரிய அன்பு வேறொன்றில்லை' எனத்தாம் மொழிந்த இலக்கணத்துக்குத் தாமே இலக்கியமாய் இலங்கிய கிறிஸ்து பிரான்,

'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு'

*என்ற வள்ளுவரின் குறளுக்கும் இலக்கியமாகிவிட்டார்.*

'இணர் எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று'

*என்ற திருக்குறளுக்குத் தம் வாழ்வால் உரைவகுப்பதுபோல், கொடிய சிலுவையில் தம்மை அறைந்து துன்புறுத்தியோரையும் பழித்துப் பரிகசித்தோரையும் ஒரு சொல் இகழ்ந்தும் சபித்தும் கூறாது 'உற்றநோய் நோன்று' தவத்தின் மெய்யுருவாய்த் திகழ்ந்தார் இயேசு பிரான்.*

'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ?
ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும்'

*என்றார் வள்ளுவர். மனித சமுதாயத்தின்மேல் இயேசுபிரான் வைத்த மட்டற்ற அன்பு, அவர்தம் மானிட வாழ்வில் தம் அன்புக்குரியோர் அவலம் கண்டு உதிர்த்த கண்ணீரால் உறுதி பெற்றது.*

*தாம் கட்டற்ற அன்பு காட்டும் ஒருவருக்காக, இளைஞர் 'மடல்' ஏறித் தம்மையே துன்புறுத்திக் கொண்டு தம் அன்பை வெளிப் படுத்தும் செயலைப் பற்றி, அகப்பொருள் இலக்கியங்கள் பேசும். வள்ளுவப் பெருந்தகையும் இதைக் குறிப்பிட்டு,*

'காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடலல்லது இல்லை வலி'

*என்று பாடியுள்ளார். கிறிஸ்து பெருமானும் மானிட குலத்தின் மீது கரையற்ற—கட்டற்ற அன்பு பூண்டதனால் தான், சிலுவை மரமாகிய 'மடல் ஏறி' நின்றார் எனப் பேராசிரியர் சத்திய சாட்சி தம் கவிதை யொன்றில் குறிப்பிடுகிறார்.*

'மாந்தர் மீதன்பு நேர்ந்த நிலையிலே நின்ற கிறித்து பிரான்
ஊர்ந்தார் சிலுவை மடல்'

*என்பது அக்கவிதை வரி.*

இவ்வாறாக, கிறிஸ்து பெருமானின் வாழ்வும் வாக்கும் திருக்குறள் அறங்களின் வாழ்வியல் உரையாக – நடைமுறைப் பதிப்பாகப் பொலிந்திலங்குகின்றன.

விவிலிய மறையும் திருக்குறட் சுடரும் நமது வாழ்க்கைப் பயணத்தில் இருளகற்றி ஒளிபரப்பி ஐயமறுத்து அறிவு கொளுத்தி நாம் தடுமாறும் வேளைகளில் கரம் கொடுத்துத் தூக்கி நிறுத்தி, நம்மை உயர்ந்த இலட்சிய முகடுகளில் ஏற்றிவைத்திட வல்ல பேரருட் சாதனங்களாம் பேரிலக்கியங்கள். அவற்றை ஊன்றிப் படிப்பதும் வாழ்வில் கடைப்பிடிப்பதுமே நாம் உய்யும் வழிகள்.

# திரு நாராயணகுருவின் சமூகத் தொண்டு

*கே.கே. சுந்தர சோபிதராஜ்*

## முன்னுரை

இந்தியாவின் தென்கோடியில் அமைந்துள்ள இயற்கைத் தாயின் எழில் கொஞ்சும் நில்ப்பரப்பு கேரளம். இங்கு தான் இயற்கைக்கு எதிரான தீண்டாமையும் சாதிக்கொடுமைகளும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தலைவிரித்தாடின. சுவாமி விவேகானந்தர் அன்றைய கேரளத்தைச் "சமூக சாதிப் பிரிவினைகள் மலிந்த பைத்தியக்காரர்களின் கூடாரம்" என்று வருணித்தார். கேரளத்து மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பங்காக வாழும் ஈழவ சமுதாயத்தினர், தங்கள் உரிமைகளுக்காகப் போராட— மேல்மட்ட மக்களிடமிருந்து விடுபட வழி தெரியாது பல இன்னல்களை அனுபவித்தனர். தாழ்த்தப்பட்ட—ஒடுக்கப்பட்ட — மனித சமுதாயத்தை விழிப்படையச் செய்து நல்வழியில் செலுத்த உலகின் பல பகுதிகளிலும் அவ்வப்போது தத்துவ ஞானிகள், சமயத் துறவிகள், மகாத்மாக்கள், அறிஞர் பெருமக்கள் தோன்றியுள்ளதை இந்தியநாடு நன்கு அறியும். மரபு நெறிப்படி கேரளத்தின் சமூக நிலைமைகளை மாற்றி, தாழ்த்தப்பட்ட மனித குலம் மேல்நிலை அடைய சமூக இருளை அகற்றும் ஞான சூரியனாக, ஒடுக்கப் பட்டவர்களுக்கு வழிகாட்டி ஒளி கூட்டும் விடிவெள்ளியாகத் திருவனந்தபுரம் நகரத்திற்கு மேற்கே 15 கி.மீ. தொலைவிலுள்ள செம்பழந்தி கிராமத்தில் 1854—ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் இருபதாம் நாள் நாராயண குருதேவர் தோன்றினார்.

## பிறப்பும் கல்வியும்

செம்பழந்தி கிராமத்தின் 'வயல்வாரம்' வீட்டில் மாடன் ஆசானுக்கும் குட்டிக்கும் ஒரே ஆண்மகவாக சதய நட்சத்திரத்தில் பிறந்தவரே குரு. விவசாயத்தோடு சோதிடம், ஆயுர்வேதம் போன்ற

துறைகளில் சிறந்து விளங்கியவர் தந்தை. தாயோ எளிமை, அடக்கம் அன்பு, பக்தி ஆகியவற்றின் உறைவிடமாகத் திகழ்ந்தார். ஐந்தாவது வயதில் நாராயணன் என்ற பெயரும் 'நாணு' என்ற செல்லப்பெயரும் கொண்ட அந்தச் சிறுவன் செம்பழந்தி நாராயணன் ஆசானிடம் கல்விகற்கத் தொடங்கினார். அது தற்காலிகமாக நின்று போயிற்று. கன்று காலிகளை மேய்க்கத் தொடங்கிய அவர் இறைவழிபாட்டில் நாட்டம் கொண்டார். நாணுவுக்கு உயர்கல்வி அளிக்க அவருடைய மாமனான கிருஷ்ண வைத்தியர் உறுதிகொண்டார். பதினான்காம் வயதில் நின்று போன கல்வி இருபத்தியொன்றாம் வயதில் மீண்டும் தொடர்ந்தது. கருநாகப்பள்ளி 'செறுவன்னூர்' வீட்டில் இராமன் பிள்ளை ஆசானிடம் வடமொழி கற்றார். நான்கு ஆண்டுகளுக்கு மேல் அவ்வுயர்கல்வியும் தொடரவில்லை.

## குருவின் தமிழறிவு

இக்காலகட்டத்தில் துறவு வாழ்க்கை மேற்கொண்ட குரு, திருவனந்தபுரம் சாலைப் பகுதியில் பிச்சை எடுத்து உண்டு வாழ்ந்த காலத்தில் புத்தகக் கடை வைத்திருந்த ஒரு தமிழருடன் நட்புக் கொண்டார்; புத்தகக் கடை உரிமையாளர் வெளியே செல்லும்போது கடையைப் பார்த்துக்கொள்ளும் நாணு, தமிழ்மொழி கற்றதோடு தமிழிலக்கியங்களையும் கற்றார். இக்காலத்திலேயே "நன்னூல், மணிமேகலை, சிலப்பதிகாரம், தேம்பாவணி, திருக்குறள், திருவாசகம் போன்ற நூற்களை அவர் படித்திருந்தார்" என மூர்க்கோத்துக்குமாரன் கூறுகின்றார்.

## ஆசிரியப் பணி

கடைக்காவூரின் அருகே 'வீரான் காவு' என்ற இடத்திலும் 'அஞ்சுதெங்கு' என்னுமிடத்திலும் சிறிது காலம் ஆசிரியப்பணியை மேற்கொண்டார்.

## திருமணம்

நாராயணனின் பக்தி நிலையையும் துறவு நிலையையும் கண்ட பெற்றோர், துறவு நிலையினின்று அவர் மனதை மாற்ற மாமன் மகளைத் திருமணம் செய்து வைத்தனர். திருமணம் நடந்த நாள் முதலாக வீட்டிற்கு வெளியே தங்கினார். உறவினர் வற்புறுத்தலின் பேரில் மனைவி வீட்டிற்குச் சென்றார். தம் உறவினர்களை அழைத்து,

"உலகத்தில் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொன்றை உருவாக்கப் பிறக்கிறான். எனவே நான் என் வழியில் செல்கிறேன்; நீங்கள் உங்கள் வழியில் செல்லுங்கள்" என்று கூறிய பின்னர் அந்த வீட்டிற்குப் போகவே இல்லை.

## துறவு

இல்லற வாழ்வைத் துறந்து வேதாந்த ஆராய்ச்சியில் ஈடுபட்ட நாணுவுக்கு 'இராம பிரம்மானந்த சுவாமிகள்' என்னும் மகானின் உறவு கிடைத்தது. இக்காலகட்டத்தில் அணியூர் கோவிலில் அவர் சட்டம்பி சுவாமிகளைச் சந்தித்தார். அவர் நாணுவுக்கு 'பாலசுப்பிரமணிய மந்திரம்' உபதேசித்தார். சிறது காலம் இருவரும் சித்தர்களை வணங்கியும், தனிமையில் தியானம் செய்தும் கழித்தனர்.

## சட்டம்பி சுவாமிகளும் நாணுவும்

சட்டம்பி சுவாமிகளோடு உடனிருந்த காலத்து அருவிப்புரம் சென்றார் நாணு. நாயர் குடும்பத்தவரான சட்டம்பி சுவாமிகளும் ஈழவரான நாணுவும் கொண்டிருந்த உறவு அன்றைய சமுதாயப் பிரிவினரிடையே பெரும் பிரச்சனையாக விளங்கியது. தன் கவிதைப் படைப்பான நவமஞ்சரியில் சட்டம்பி சுவாமிகளை 'சிசுநாமகுரு' எனப் போற்றினாலும் இவர்கள் உறவு இருநண்பர்களின் உறவு போன்றே விளங்கியது. தைக்காடு அய்யாவு என்பரிடம் நாணுவை அறிமுகம் செய்து வைத்து பிரணாயாமம் முதலிய யோகப் பயிற்சிகளைப் பயின்று பல சித்திகளும் கைவரத் துணைபுரிந்தவர் சட்டம்பி சுவாமிகளே.

## மருந்துவாழ்மலையில் நாணு

யோகசித்திகள் பயின்ற பின் கன்னியாகுமரி மாவட்டத்தில் இன்றும் போற்றப்படும் மருந்துவாழ் மலைக்குச் சென்றார். மருந்துவாழ் மலையில் தவம் புரிந்த காலத்தில் வெறும் பச்சிலைகளும் காய்களும் கிழங்குகளுமே அவர் உண்டு வாழ்ந்தார் எனத்தெரிய வருகிறது. "எளிய நிலையில் பிறந்த நாணு என்னும் கிராமியச் சிறுவனை நாராயண குரு என்னும் உயர்ந்த நிலைக்கு உயர்த்தியது மருந்து வாழ் மலையே" என்று நடராஜகுரு குறிப்பிடுகின்றார். ஆன்ம உணர்வு கைவரப் பெற்ற நிலையில் தனிமை வாழ்க்கையிலிருந்து விடுபட்டு மக்களிடையே தென்னிந்தியாவில் பல இடங்களிலும்

அலைந்து திரிந்தார். இக்காலகட்டத்தில் யாசகம் செய்த உணவையே உண்டார்.

## அருவிக்குரத்தில் அதிசயம்

தவம் முடித்து மீண்டும் அருவிப்புரம் சென்றார் சுவாமிகள். மக்கள் நடமாட்டம் அதிகமில்லாத அந்த இடத்தின் ஆற்றொழுக்கின் ஆரவாரமும் பாறைகள் சூழ்ந்த மரங்களடர்ந்த கானகமும் தனிமைச் சூழலை விரும்பும் சுவாமிகளுக்கு மன நிறைவு தந்தது. "பல நாட்கள் உணவின்றியே பாறைகளின் மீது சுவாமிகள் வீற்றிருந்தார்" எனக் குமாரனாசான் குறிப்பிடுகின்றார். அருவிப்புரத்தில் தன்னந்தனியாக வீற்றிருந்த செய்தியறிந்த மக்கள் சித்தர் எனப்போற்றி வழிபடலாயினர்.

## சிவலிங்கம் நிறுவுதல்

சாதிப் பிளவுகளின் காரணமாக ஆலயத்தில் நுழையத் தடை ஏற்பட்ட நிலையே மக்களை அருவிப்புரத்திற்கு வரவழைத்தது என்பதை சுவாமிகள் புரிந்து கொண்டார். தன்னை நாடி வரும் மக்களுக்குத் தேவை ஓர் ஆலயம் என உணர்ந்த சுவாமிகள், அருவிப்புரத்தில் ஆலயம் நிறுவவேண்டும் என்று பக்தர்களிடம் கூறினார். 1888-ஆம் ஆண்டு சிவராத்திரியை ஆலயம் நிறுவும் நன்னாளாகக் குரு முடிவு செய்தார். மக்கள் தங்கள் தகுதிக்கேற்ப வழிபாட்டுப் பொருள்களுடன் அருவிப்புரம் வந்தனர். நதியின் கிழக்குப் பகுதியில் உள்ள பாறை தூய நீரால் கழுவப்பட்டு விளக்குகளால் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. நடு இரவில் ஆற்றில் மூழ்கி எழுந்த சுவாமிகள் கைகளில் சிவலிங்கம் ஒன்று இருந்தது. அலங்கரித்த பந்தலில் சிவலிங்கத்தோடு மூன்று மணிவரை தியான நிலையில் நின்றார் மூன்று மணிக்கு லிங்கத்தைப் பீடத்தில் வைத்து திருநீராட்டுச் செய்தார்.சுவாமிகள் அருவிப்புரத்தில் சிவாலயம் நிறுவிய நிகழ்வு நாயர்களிடையேயும் பிராமணர்களிடையேயும் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியது, "நான் பிராமண சிவனைப் பிரதிஷ்டை செய்யவில்லை. ஈழவ சிவனைத் தான் பிரதிஷ்டை செய்தேன்" என்பதே அவர்களுக்குச் சுவாமிகள் கூறிய பதில். அருவிப்புரத்தில் சிவாலயம் நிறுவிய சுவாமிகளின் பெயர் கேரளத்தில் பலரும் அறிந்த ஒன்றாயிற்று.

## வைக்கத்தில் கோவில் நிறுவுதல்

வைக்கத்தில் கோவில் நிறுவ வேண்டும் என்ற பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அங்கு ஒரு சிவ ஆலயம் நிறுவினார். தன்னிடம் பக்திசெலுத்திய நாராயணண் என்ற சீடரின் இல்லத்திற்கு ஒரு நாள் சுவாமிகள் சென்றார். தன் பணிக்குத் துணைபுரியும் ஆட்களைத் தேடுகின்ற சுவாமிகளின் கண்களில் அவர் மகன் 'குமாரு' தென்பட்டார். அச்சிறுவனின் புத்திக்கூர்மை கண்ட சுவாமிகள் 'குமாரு நமக்கிருக்கட்டும்' என்று கூற நாராயணனும் சம்மதித்தார். அந்தக் குமாரு தான் நாடறிந்த கேரளப் புலவரான குமாரனாசான். சுவாமிகளோடு சமுதாயப் பணியாற்றப் புறப்பட்ட குமாரனாசான் குடும்ப உறவுகளைத் தவிர்த்தார்.

## டாக்டர் பல்பு

சமுதாய ஏற்றத்தாழ்வுகளால் துன்புற்ற ஓர் ஈழவக் குடும்பத்தில் பிறந்தவர் டாக்டர் பல்பு. அயல் நாட்டிற்குச் சென்று உயர்கல்வி கற்று வந்த போதும் 'ஈழவன்' என்ற காரணத்தால் அவருக்கு வேலைதர மறுத்தது திருவிதாங்கூர் அரசு. மைசூரில் உயர்பதவி வகித்த அவருக்கு கேரளத்தில் தன் சமுதாயத்தினர் அனுபவிக்கும் துயரங்கள் ஆறாத மனத்துயரளித்தன. தனது தாய்நாடான கேரளத்திற்கு வரும் போதெல்லாம் குடும்பத்தை விட சமுதாயத்தினரிடம் அதிக உறவு கொண்டவர் அவர். 1895 ஆம் ஆண்டில் சுவாமிகள் அவரை பங்களூரில் சந்தித்தார். சுவாமிகளின் வேண்டுகோளின்படி பங்களூரிலுள்ள வடமொழிக் கல்லூரியில் குமாரனாசான் பயில ஆவன செய்தார்.

## சுவாமிகள் பயணம்

குமாரனாசானைப் பங்களூரில் தங்க வைத்த பின்னர் பிற சீடர்களுடன் சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி முதலான இடங்களுக்குப் பயணம் செய்தார். மத்திய, வடதிருவிதாங்கூர் பகுதிகளில் அவர் பயணம் மேற்கொண்ட காலத்தில் தான் 'ஸ்ரீ நாராயண குரு சுவாமிகள்' என்ற பெயரால் அறியப்பட்டார்.

## குருவின் சமுதாயப் பணி

குருவின் பயணத்தின் போது கூறிய அறிவுரைகளால் துர்தேவதைகளை வழிபட்டுவந்த ஈழவ சமுதாயத்தினர் சிவன்,

விஷ்ணு, விநாயகர், முருகன், அம்மன் போன்ற தெய்வங்களை வழிபடத் தொடங்கினர். சுவாமிகள் உயிர்களைப் பலிகொடுக்கும் முறைகளை நிறுத்த வேண்டினர். இறைச்சிக்கடை வைத்து விற்பனை செய்து வந்த ஈழவர்களை அவ்வாறு செய்யக்கூடாது என்று அறிவுரை கூறினார். படிப்பு வாசனையற்றவர்களுக்குக் கல்வியறிவு தரப் பணமும் திரட்டத் தொடங்கினார்.

## சரித்திரம் உருவாக்கிய நிறுவனம்:

1903 – ஆம் ஆண்டு, கேரள வரலாற்றையே மாற்றியமைத்த ஒன்று. சமூகத்தின் கொடுமைகளினின்றும் மக்களை விடுவிக்க அயராது இன்றும் சேவைகள் பல செய்துகொண்டிருக்கும் ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன சங்கம் இவ்வாண்டு ஜனவரி மாதம் நான்காம் தேதி நிறுவப்பட்டது. சுவாமிகள், டாக்டர் பல்பு, குமாரனாசான் ஆகிய மூன்று மகான்கள் இணைந்த முக்கடல்களின் சங்கமமே இச்சங்கத்தின் அடிக்கற்கள்.

## ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன சங்கத்தின் நோக்கம்

சமுதாயத்தினிடையே நிலவுகின்ற பழைய ஆசாரங்களை அழித்துப் புது ஆசாரங்களை உருவாக்குதலே இதன் தலையாய நோக்கம். தீண்டாமை, திருமணம் மற்றும் திருவிழாவின் பெயரால் வீண் செலவு செய்தலைச் சங்கம் எதிர்த்தது. 1905–ஆம் ஆண்டு அக்டோபர் 16 ஆம் நாள் கொல்லத்தினருகே பரவூரில் கூடிய ஈழவர் கூட்டத்தில் தேவையற்ற ஆசாரங்களைக் கைவிடுவது பற்றியும் சடங்குகளற்ற புது முறைத் திருமணம் நிகழ்த்துவது பற்றியும் முடிவெடுக்கப்பட்டது.

## திருமணம்

திருமண மண்டபத்தில் மங்கலப் பொருட்களும் குத்து விளக்கும் வைத்து, புரோகிதன் மந்திரம் ஓத, மங்கள இசை முழங்க, புதுமணத்தம்பதிகள் மண்டபத்தை மூன்றுமுறை வலம்வந்தபின் மலர் மாலைகளை மாற்றிக் கொள்ளவேண்டும்.

பரவூர்க் கூட்டத்தின் இரண்டாம் ஆண்டுவிழாவில் சுவாமிகள் விவசாயப் பெருமக்களின் கூட்டத்தைக் கூட்டி எடுத்த முடிவுகள் வருமாறு:

### மதம்

கண்மூடித்தனமான நம்பிக்கைகளையும் உயிர்ப்பலி கொடுக்கும் தேவதைகளின் ஆராதனைகளையும் தவிர்க்க வேண்டும். சுத்த இந்துமதத்தின் நீதிகளை எடுத்துக் கூறி இறைவனிடம் பக்தி செலுத்த அறிவுறுத்த வேண்டும். மக்கள் விரும்பும் இடத்தில் கோவில்களோ மடங்களோ உருவாக்க உதவ வேண்டும்.

### ஆசாரங்கள்

உண்மை, சுத்தம், தர்மம் ஆகியவற்றைக் கடைப்பிடிக்க உதவும் ஆசாரங்களை மட்டுமே கையாள வேண்டும். கண்மூடித்தனமான ஆசாரங்களிலிருந்து அவர்களை மாற்ற இவை அறிவுறுத்தப் படவேண்டும்.

### கல்வி

கல்வியறிவினால் கிடைக்கின்ற உயர்ந்த நன்மைகளையும் கல்வியறிவின்மையால் ஏற்படுகின்ற தீமைகளையும் எடுத்துரைக்க வேண்டும். ஆடவர்க்கு மட்டுமின்றி, பெண்டிருக்கும் கல்வியறிவு நல்க வேண்டும். அவசியமான இடங்களில் சமுதாயத்தினரின் மொத்தச் செலவில் கல்விக் கூடங்களோ நூல் நிலையங்களோ ஏற்படுத்த வேண்டும்.

### விவசாயம்

பயிர்த்தொழில், வியாபாரம், கைத்தொழில் முதலியவற்றை முன்னேற்றுவதற்குரிய வழிகளை ஏற்படுத்துவதோடு ஆடவரும் பெண்டிரும் தொழில் செய்து வாழ்வதற்குரிய வழிகளைக் கையாள வேண்டும். தேவையான இடங்களில் தொழிற்சாலைகளை ஏற்படுத்தித் தற்கால முறையில் தொழில் செய்ய மக்களுக்கு வழிகாட்ட வேண்டும்.

### குருவின் கடிதங்கள்

1909—ஆம் ஆண்டு மே மாதம் 10—ஆம் நாள் சுவாமிகள் தர்ம பரிபாலன சங்கத்தின் செயலாளருக்குக் கடிதம் ஒன்று எழுதினார். கோவில்களை உருவாக்குவதோடு இறைபக்தி அனைத்து வீடுகளிலும் இதயங்களிலும் ஏற்பட வேண்டும். மதப் பிரசாரகர்களை அனுப்பி அடிக்கடி கூட்டங்கள் நடத்த வேண்டும். மதச் சடங்குகளாயினும் திருவிழாக்களாயினும் ஆடம்பரச் செலவுகளின்றி நடத்த வேண்டும்.

திருமணத்தில் தாலி அணிவது நன்றே. ஆடவரும் பெண்டிரும் மறுமணம் செய்யலாம். ஆனால் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நியதியையே கையாள வேண்டும். மருமக்கள் தாய முறையோடு மக்களுக்கும் சொத்தில் பங்களிக்கவேண்டும். இவற்றிற்கான ஏற்பாடுகளை உடனே சங்கம் கவனித்துச் செயல்படவேண்டும். தன் சமுதாயத்தினர் மேம்பாடடையச் செயல்புரிய வேண்டும். அதே ஆண்டு ஆகஸ்டு மாதம் 31—ஆம் நாள் மீண்டுமொரு கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் சமுதாயத்தைச் சீர்திருத்துவதற்குரிய மனப்பான்மை உடைய இளைஞர்களைத் தேர்ந்தெடுத்துப் பிரம்மச்சாரிகளாகச் சங்கம் ஏற்றபின் கல்வியறிவும் சந்நியாசமும் வழங்கி சமுதாயப் பணிக்கு அனுப்ப வேண்டும் என எழுதப்பட்டிருந்தது.

## சிவகிரி

1904—ஆம் ஆண்டு சுவாமிகள் வர்க்கலை சென்று அங்குள்ள குன்றின் மீது பர்ணசாலை ஒன்றை அமைத்துத் தங்கினார். அதைச் சுற்றிலும் பலவிதத் தாவரங்களை நட்டு வளர்க்கவும் தொடங்கினார். வர்க்கலைக் குன்றில் சுவாமிகள் தங்கும் செய்தியறிந்த மக்கள் கூட்டமாக அங்கு வரத்தொடங்கினர். சுவாமிகள், கோவிலும் மடமும் வர்க்கலையில் நிறுவ முடிவு செய்தார். தான் தங்கியிருந்த இடத்தை அரசாங்கத்திடமிருந்து வாங்கியபோது, அருகிலுள்ள நில உடைமையாளர்கள் அவ்விடங்களைச் சுவாமிகளுக்குத் தானம் செய்தனர். சுவாமிகள் வர்க்கலைக் குன்றை, "மனித வாசமற்ற, அழகு நிறைந்த அருவிகள், இசைபாடுகின்ற, காற்று எதிர்கொண்டமைந்த இவ்விடம் மனிதனின் வீணாசையின் சாயல் படாத இடமாதலால் இது ஒரு புண்ணியபூமி" என்று குறிப்பிட்டார். அங்கே சிவன் கோயில் ஒன்றை உருவாக்கி வர்க்கலைக் குன்றுக்கு 'சிவகிரி' எனப் பெயரிட்டார்.

## சிவ கிரியில்

1912—ஆம் ஆண்டு மே மாதத்தில் தான் ஏற்படுத்திய மடத்தில் தாமரை மலரில் வீற்றிருக்கும் சாரதா தேவியின் திருவுருவப் படத்தை நிறுவினார். சாரதா மடம் மட்டுமன்றி ஆங்கிலக் கல்வி நிலையமும் வடமொழிக் கல்வி நிலையமும் ஏற்படுத்தினார். சாரதா மடத்தில் பிற கோயில்களைப் போலன்றி தோத்திரங்கள் கூறித் தியானிப்பதே வழக்கம்.

## தீர்த்தாடனத் திருத்தலம்

1928—ஆம் ஆண்டு முதல் சுவாமிகளின் அனுமதியுடன் சீடர்கள் எல்லா ஆண்டும் ஜனவரி முதல் நாளில் தீர்த்தாடன நாள் ஏற்பாடு செய்தனர். இன்றும் கேரளத்தில் அந்நாளை தீர்த்தாடனத் திருவிழாவாகக் கொண்டாடுகின்றனர். அந்நாளில் மஞ்சள் நிற ஆடை அணிந்து சிவகிரி வருவது வழக்கம். அந்நாளில் கல்வி, பக்தி, தொழில் ஆகியவற்றைக் கருக்களாகக் கொண்டு அரிய பல உண்மைகளை மக்களுக்கு உணர்த்த வேண்டும என்பதே சுவாமிகளின் அவா.

## மீண்டும் பயணம்

1917—ஆம் ஆண்டு சுவாமிகள் தமிழ்நாட்டுப் பக்தர்களின் விருப்பத்திற்கிணங்க சென்னை சென்றார். 1918—ஆம் ஆண்டும் 1923—ஆம் ஆண்டும் இலங்கை சென்றார். முதல் பயணத்தின் போது சீடர்களின் விழைவிற்காக மஞ்சள்நிறத் துறவு ஆடையை அணிந்தார். 1926—ஆம் ஆண்டு கோயம்புத்தூர், நீலகிரி, பொள்ளாச்சி, பழநி போன்ற இடங்களுக்குச் சென்றார். 'என்னை முதலில் புரிந்து கொண்டது தமிழ் நாடே' என்று அவர் குறிப்பிடுவது வழக்கம். தமிழ்நாட்டின் பல இடங்களிலும் மடங்கள் உருவாக்கினார்.

## இரு கவிஞர்கள்

1923—ஆம் ஆண்டு மகாகவி தாகூர், சுவாமிகளை சிவகிரியில் சந்தித்தார். சிவகிரியின் குருவும் சாந்திநிகேதனத்தின் குருவும் சந்திக்கும் அவ்வரிய காட்சியைக் காண மக்கள் திரளாகக் கூடினர். இருவரும் கைகூப்பி அமர்ந்த போது தாகூர் சுவாமிகளின் செயல்களைப் போற்றிப் புகழ்ந்தார். அதற்குச் சுவாமிகள், "நாம் இதுவரை ஒன்றும் செய்யவில்லை. வருங்காலத்தில் செய்ய இயலும் என்றும் தோன்ற வில்லை. எனது பலவீனத்தை நினைத்து நானே வருந்துகிறேன்" என்று பதிலிறுத்தார்.

## சர்வசமயக் கூட்டம்

1924—ஆம் ஆண்டு சர்வ சமயக் கூட்டம் ஒன்றை மார்ச் மாதம் 3,4—ஆம் நாட்களில் சுவாமிகள் கூட்டினார். எல்லா மதத் தலைவர்களும் தங்கள் மதத்தின் சிறப்புகளைக் கூறினர். இக் கூட்டத்தின் குறிக்கோள் 'அறிவதும் அறிவிப்பதும்' என்ற சுவாமிகள்,

'அனைத்து மதங்களின் உபதேசமும் ஒன்றே' என அனைத்து மதத்தலைவர்களின் பேச்சிலிருந்து வெளிப்படுகின்றது என்றார்.

## இருபெரும் தலைவர்கள்

நாட்டை சீர்திருத்தத் தங்கள் வாழ்வினைத் தியாகம் செய்த இருபெரும் தலைவர்களான சுவாமிகளும் மகாத்மா காந்தியடிகளும் 1925 – ஆம் ஆண்டு மார்ச் மாதம் 12–ஆம் நாள் சிவகிரி மடத்தில் சந்தித்தனர். இச் சந்திப்பைப் பற்றி மகாத்மாகாந்தி, "மனோகரமான திருவிதாங்கூர் நாட்டைக் காண்பதற்குச் சந்தர்ப்பம் வாய்த்ததனையும், புண்ணியவரான ஸ்ரீ நாராயண குரு சுவாமிகளைத் தரிசிக்க சந்தர்ப்பம் கிடைத்ததையும் எனது வாழ்க்கையின் மிகப் பெரும் பாக்கியமாகக் கருதுகின்றேன்" என்று பெருமை பாராட்டியிருக்கிறார்.

## ஸ்ரீ நாராயண சங்கம்

தனது வாழ்க்கைப் பயணம் முடிவுபெற நாட்கள் நெருங்கி விட்டன என்பதை உணர்ந்த சுவாமிகள் 'ஸ்ரீ நாராயண சங்கம்' என்ற பெயருடன் துறவிகள் சங்கம் ஒன்றை 1928–ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 11–ஆம் நாள் பதிவு செய்தார். உலகிற்குச் சேவை புரியத் துறவிகளால் தான் இயலும் என்ற கருத்தினரான சுவாமிகள் தனது பணிகளைத் தொடர்ந்து செயலாற்றும் உரிமைகளைத் தனது மருமகனான போதானந்த சுவாமிக்கு எழுதி வைத்தார். போதானந்த சுவாமிக்குப் பின் சங்கத்தின் பெயரில் இருக்கும் சொத்துரிமை, சங்க அங்கத்தினர்கள் எந்தத் துறவியைத் தேர்ந்தெடுக்கின்றனரோ அவரைச் சேரவேண்டும் என எழுதிவைத்தார். ஸ்ரீ நாராயணகுரு தர்ம பரிபாலன சங்கப் பொதுக்கூட்டத்தில் சுவாமிகள், "சங்கமாக நின்றால் தான் எந்த ஒரு சமுதாயத்திற்கும் நன்மை உண்டாகும். எனவே தான் இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன்னர் (1903) இச்சங்கத்தை உருவாக்கினேன். 'ஈழவன்' என்ற பெயர் ஒரு சாதியையோ ஒரு மதத்தையோ சுட்டுவதன்று. எனவே எவரும் இச்சங்கத்தில் சேரலாம் என நாம் விரும்புகிறோம்" என உரையாற்றினார்.

## இறுதிப் பணிகள்

சுவாமிகள் இறுதியாக 1927 ஆம் ஆண்டு நிறுவிய கோயில் 'களவங் கோடம்' என்னுமிடத்தில் அமைந்தது. நிறுவச் சிவன் உருவம் இருந்த போதும் நிலைக் கண்ணாடி ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி

அதன் கீழ் 'ஓம் சாந்தி' எனப் பொறித்து நிறுவினார் 1928—ஆம் ஆண்டு ஜனவரி 14—ஆம் நாள் கோட்டயத்தில் நடைபெற்ற ஸ்ரீ நாராயண குரு தர்ம பரிபாலன் சங்கக் கூட்டமே சுவாமிகள் இறுதியாகப் பங்கேற்ற கூட்டமாகும். இக்கூட்டத்தின் போது 108 கிளைச்சங்கங்கள் பதிவு செய்யப்பட்டன.

## மகாசமாதி

ஏற்கனவே நோயால் பீடிக்கப்பட்ட சுவாமிகள் நோயின் கடுமையால் மருத்துவ உதவிக்காக பாலக்காட்டிற்கும் பின்னர் சென்னைக்கும் கொண்டு செல்லப்பட்டார். நோய் கடுமை குறைந்த போது சிவகிரிக்குத் திரும்பி வந்தார். 1928—ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 28 ஆம் நாள் நோய் அதிகரித்தது. வித்தியானந்த சுவாமிகள் 'ஜீவன் முத்தி பிரகரணம்' என்ற நூலை வாசிக்கக் கேட்ட படியே சுவாமிகள் சமாதியடைந்தார். செய்திகேட்ட பக்தர்கள் வாய் விட்டு அழுதனர். வெள்ளிக் கிழமை, சுவாமிகளால் சமாதிக்குச் சிறந்த இடம் எனக் கூறப்பட்ட இடத்தில் சமாதி வைத்தனர். சனிக்கிழமையன்று சமாதியை மூடிக் கல்லும் இட்டனர்.

## முடிவுரை

மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்த மக்களைக் கரைசேர்க்கச் சரியான வழிகாட்டி இல்லாத ஒரு காலத்தில் பிறந்து, தன் சமுதாயத்தினருக்காகவும் பிறருக்காகவும் அயராது சேவை செய்தவர் சுவாமிகள். ஒரு சாதாரணக் குடும்பத்தில் பிறந்து, அசாதாரணமான முறையில் வாழ்ந்து, கேரள வரலாற்றில் தனக்கென அழியாப் புகழும் பெற்றார். உற்றார் உறவினரை விடத் தன் சுற்றமும் சொந்தமுமாய் வாழ்ந்த மக்களுக்குத் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்த மகான் அவர். பிறருக்கு அறிவுறுத்தியதோடு நில்லாமல் இறுதிவரை அதன் வழி நின்றவர்'. பிற சமுதாயத்தினருக்கும் தம் பணியை ஆற்றியுள்ளார். வாழ்ந்த காலத்தில் மகான் எனப் போற்றப்பட்டாலும் இக்காலத்திலும் அவர் சிறப்பை முழுமையாக உணரமுடிகிறது.

# இரட்சணியம் எனும் ஈடேற்றம்

*யோ. ஞான சந்திர ஜாண்சன்*

தமிழில் தோன்றிய கிறித்தவக் காப்பியங்களுள் தலைசிறந்து விளங்குவன தேம்பாவணியும் இரட்சணிய யாத்திரிகமும். இவை இரண்டும் தமிழ்க் கிறித்தவஇலக்கிய உலகில் இரு கண்களாகப் போற்றப்படுவன. 'கிறித்தவக் கம்பர்' எனப் போற்றப்படும் ஹென்றி ஆல்பர்ட் கிருட்டின பிள்ளை அவர்களால் இயற்றப்பட்ட இரட்சணிய யாத்திரிகம் ஒரு முற்றுருவகக் காப்பியம். காப்பியக் கவிஞர்களான கம்பரையும் சேக்கிழாரையும் பின்பற்றி இலக்கியநயம் ததும்பும் வகையில் காப்பியத்தைப் படைத்துக் கிறித்தவஇலக்கியத்திற்குப் பெருமை சேர்த்துள்ளார் கிருட்டினபிள்ளை.

## இரட்சணிய யாத்திரிகம்

இங்கிலாந்து நாட்டில் எல்சிட்டோ எனும் கிராமத்தில் பிறந்த ஜாண் பனியன் (1628—1688) பன்னிரண்டு ஆண்டுகள் சிறையில் இருக்கும் போது எழுதிய நூல் பில்கிரிம்ஸ் ப்ராகிரஸ் (Pilgrims Progress) என்பதாகும். தமிழில் இந்நூலைப் பின்பற்றி அருள்திரு. சாமுவேல் பவுல் அவர்கள் 1882ஆம் ஆண்டு 'மோட்சப்பிரயாணம்' எனும் உரைநடை நூலையும், ஆழ்வார்தோப்பு கிராமமுனிசீப் சுவீகரனார் 1887 ஆம் ஆண்டு 'முக்தி வழி அம்மானை' எனும் செய்யுள் நூலையும், H.A. கிருட்டினபிள்ளை 1894 ஆம் ஆண்டு 'இரட்சணிய யாத்திரிகம்' எனும் காப்பியத்தையும் வெளியிட்டனர். "சிறந்த ஆங்கில இலக்கியங்கள் பயனுள்ள வகையில் இந்திய மொழிகளில் எவ்வாறு தழுவப்படலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக இரட்சணிய யாத்திரிகம் திகழ்கிறது" என 'தி ஹிந்து' எனும் ஆங்கில இதழில் வெளிவந்த செய்தி குறிப்பிடத்தக்கது. தமிழ் மரபுகளைப் பின்பற்றி, கதையில் இடம் பெறும் சில சூழல்களை மாற்றியமைத்து இலக்கிய நயங்களைச் சேர்த்து பதினான்கு ஆண்டுகளாக இரட்சணிய யாத்திரிகத்தை எழுதியதன் காரணமாக இச்சரிதைத் தமிழ் மண்ணில் தோன்றிய சரிதம் போன்ற உணர்வைப் படிப்பார் பெற முடிகின்றது

இரட்சண்யத்தை நாடிச் செல்லும் யாத்திரிகனின் பயணம் பற்றியதால் இரட்சணிய யாத்திரிகம் என்னும் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இரட்சணிய யாத்திரிகம் சிறப்புப்பாயிரம், பதிகம் ஆகியவற்றை முதலிலேயும், அவற்றைத் தொடர்ந்து ஆதி பருவம், குமாரபருவம், நிதானபருவம், ஆரணிய பருவம், இரட்சணிய பருவம் எனும் ஐந்து பருவங்களையும் உள்ளடக்கியது. இவ் ஐந்து பருவத்தினுள் வரலாற்றுப் படலம் முதலிய 47 படலங்கள் உள்ளன. இப்படலங்களில் உள்ள மொத்த பாடல்களின் எண்ணிக்கை 3622. மேலும் ஆதிபருவத்தில் மூன்றும், குமாரபருவத்தில் இரண்டும், நிதானபருவத்தில் ஒன்றும், ஆரணியபருவத்தில் ஒன்றும், இரட்சணிய பருவத்தில் மூன்றுமாக ஒன்பது தேவாரப் பதிகங்களாலமைந்த 144 இசைப்பாடல்களும் உள்ளன. இத் தேவாரப் பாசுரங்கள் காவியத்திற்குத் தனிச்சிறப்பைக் கொடுக்கின்றன. ஆக மொத்தம் 3766 பாடல்கள் இரட்சணிய யாத்திரிகத்தில் காணப்படுகின்றன.

ஜாண் பனியனின் நூலில் இரு பாகங்கள் உள்ளன. அவற்றில் முதல்பாகம் கிறித்தவனின் யாத்திரையை விவரிக்கிறது. இரண்டாம் பாகம் கிறிஸ்தியனாள் யாத்திரை செய்வதை விளக்குகிறது. முதல் பாகத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இரட்சணிய யாத்திரிகம் படைக்கப்பட்டுள்ளது.

## காப்பியக் கதை

பாவி ஒருவன் தான் வாழ்ந்துவரும் நாடு பாவத்தின் காரணமாக அழிக்க நியமிக்கப்பட்டுள்ளது என்பதைச் சுருதி நூலைப் படித்ததன் மூலம் அறிந்து கொள்கிறான். எனவே அவன் தனது பாவத்தின் சுமையால் வருந்தி நாசநாட்டினின்று பேரின்ப நாட்டிற்குச் செல்ல விழைகிறான். நிலையான பேரின்ப நாட்டிற்குச் செல்லும் திருநெறியைத் தேடும்போது வழியில் குருவைச் சந்திக்கிறான். குருவின் ஆற்றுப்படுத்தலால் மனந்திருந்திய அவன் சுருதி நூலின் துணையுடன் அந்நாட்டிற்குப் பயணத்தைத் தொடங்குகிறான். திருப்பயணியின் முன்னேற்றத்தில் துன்பமும் இன்பமும் மாறிமாறி வருகின்றன. இறுதியில் மரண ஆற்றைக் கடந்து வீடுபேற்றினை அடைகிறான்.

## நூலின் சிறப்பு

மீட்புக்கவிஞர் இயற்றிய பல்வேறு இலக்கியங்களுள் 'இரட்சணிய யாத்திரிகமே' தலை சிறந்தது. முதலாவது இரட்சணிய

யாத்திரிகத்தின் சிலபகுதிகள் நெல்லைப் பேராய மாத இதழ் நற்போதகத்தில் வெளிவந்தன. இப்பகுதிகளைப் படித்தவர்கள் பாராட்டிய உந்துதல்களின் விளைவாக ஆசிரியர் அதை ஒரு காவியமாக அமைக்கும் பணியை மேற்கொண்டார். தமிழ்க் காவிய நடையில் புனைந்துரைகளும் பொருந்தாத கற்பனைகளுமின்றி யாவரும் எளிதில் படித்துப் பயனுறும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. "இராபர்ட் டி நொபிலிக்குப் பின் கிறித்தவ இறையியலைத் தமிழ்ப்பின்னணி, தமிழ்ச்சார்பு ஆகியவற்றோடு விளக்க முனைந்தவர் கிருட்டினப்பிள்ளையே" எனும் பேராயர் அப்பாசாமி அவர்களின் கூற்றுக் குறிப்பிடத்தக்கது. கவிஞர் கிருட்டினபிள்ளை தாம் காப்பியம் படைத்ததற்கான நோக்கத்தை விளக்கிப்பாடும் பின்வரும் அறிமுகப் பாடல் இவ்வுண்மையை உறுதிப்படுத்தும்.

"வெற்றுநேரப் போக்காய்ப் புகல் வினோதமும் அன்று;
புற்று அராவிடம் பொதிந்த செப்பு எனக்கவி புனைந்து
சிற்றின்பத் திறம் திருத்திய காதையும் அன்று;
மற்றும் இது ஆத்தும ரட்சணை வழங்கும் ஓர் மருந்தாம்"

என இலக்கியங்களைப் பொழுது போக்காகக் கருதும் சிலருக்குக் கவிஞர் தமது நூலைப் பற்றி எச்சரிக்கை கொடுத்து விடுகின்றார். இந்நூல் கம்பராமாயண அமைப்பு முறையைத் தழுவி படைக்கப் பட்டுள்ளது. இரட்சணிய யாத்திரிகத்தில் சீவக சிந்தாமணியின் இனிமையையும் திருவாசகத்தின் உருக்கத்தையும், பெரிய திரு மொழியின் கருத்துக்களையும் காணமுடிகின்றது.

இரட்சணியக் கவிஞர் கிருட்டினபிள்ளை தமது மாணவியான ஏமி கார்மைக்கேல் அம்மையாரிடம் "இரட்சணிய யாத்திரிகத்தில் என்னுடைய வாழ்க்கையையே ஊற்றியிருக்கிறேன். என்னுடைய இதயத்தின் ஆழத்தின் ஆழம் அதில் இருக்கிறது" எனக் கூறியதாக அம்மையார் குறிப்பிட்டுள்ளார்கள்.

பயணம் செய்யும் கிறிஸ்தியானின் கதை எல்லா வயதினரையும் கவரக்கூடியதாக அமைந்துள்ளது. உண்மை வாழ்க்கையில் நடப்பது போலவே நிகழ்ச்சிகள் சுவையாகவும் கோர்வையாகவும் அமைக்கப் பட்டுள்ளன. இது ஒரு பக்தி நூலாக விளங்குகிறது. தம் எழுத்துக்களில் கிறிஸ்து நெறி மீட்புக் கொள்கையைக் கவிஞர் சிறப்பிப்பதால் அவரை இரட்சணியக் கவிஞர், மீட்புக் கவிஞர் எனவும் தமிழ்க் கிறித்தவர்கள் அழைக்கின்றனர்.

மனோன்மணீயம் ஆசிரியர் கிருட்டினபிள்ளையின் கவிபாடும் ஆற்றலை மனம் திறந்து "என்ன புலவரே, சில செய்யுள் அடிகள் இயற்றுவதற்கு நான் பெரிதும் உழைக்கிறேன். ஆனால் தங்கள் மனத்தினின்று மடைதிறந்தாற்போல் கவிகள் புறப்பட்டுவரப் பாட்டிற்குப் பாட்டு எழுதிக்கொண்டே போகிறீர்களே" எனப் பாராட்டியுள்ளார். இதன் மூலம் கிருட்டினபிள்ளையின் கவிதைத்திறன் புலப்படுகின்றது. இதனால் நூல் சிறப்படைந்துள்ளது. ஜாண் பனியனுடைய நூலைப் போலவே இரட்சணிய யாத்திரிகமும் முற்றுருவகமாய் படைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## ஜாண் பனியனும் கிருட்டின பிள்ளையும்

ஜாண் பனியனின் நூலுக்கும் கிருட்டின பிள்ளையின் நூலுக்கும் பொது மூலம் வேத நூலாகும். வேதத்தின் கருப்பொருளைக் கருவாகக் கொண்டு மானிட இயல்புகளை உருவகம் செய்து, காலம், களம், மாந்தர்களைப் படைத்து பக்தியில் கனிந்த தம் உள்ளத்தின் கற்பனை வளத்தால் ஆன்மீகத்தின் படிமுறை வளர்ச்சியை மோட்சப் பிரயாணம் என்ற முக்திவழிப் பயணமாகப் படைத்தார் ஜாண் பனியன்.

H.A. கிருட்டினபிள்ளை மூலநூலின் கதைப் போக்கினை அவ்வாறே பின்பற்றுகிறார். ஆனால் பெருங்காப்பியத்தின் இலக்கணத் திற்கேற்ப அமைத்துள்ளார். கதைப் போக்கில் மாற்றம் செய்யாமல் பனியனின் நூலில் இல்லாத பல செய்திகளைத் தமது காவியத்தில் படைத்து தனித்தன்மை உடைய நூலாக உருவாக்கியுள்ளார். வரலாற்றுப் படலம், திருச்சபை, திருக்கட்டளை ஆகியவற்றை ஜாண் பனியன் கூறாதிருக்க, கவிஞர் தம் நூலில் இவற்றைச் சிறப்பாக விளக்கி, காப்பியத்திற்குப் புதுமெருகினை அமைத்துள்ளார். ஆங்கில மூலத்தில் காணப்படாத உட்தலைப்புக்கள் இரட்சணிய யாத்திரிகத்தில் உள்ளன.

ஜாண் பனியன் கூறும் மாயாபுரி அங்காடியைக் கிருட்டினபிள்ளை மாயாபுரிப் படலமாக அமைக்கிறார். மாயாபுரி என்பது மாயையான உலக வாழ்வின் உருவக விளக்கமாகும். பனியன் உலகை மாயாபுரியாக உருவகம் செய்யும் போது அதிலுள்ள தெருக்களைப் பிரித்தானியத்தெரு, பிரெஞ்சுநாட்டுத் தெரு, சொர்மானியத் தெரு என்று மேலை நாடுகளைக் குறிப்பிடுகிறார். ஆனால் கிருட்டினபிள்ளை உலகினை மாயாபுரி நகரமாகக் கூறிப் பல பாக்கங்களைக் குறிப்பிடும் போது அவற்றில் ஒன்றினை இந்தியப் பாக்கம் என்கிறார். அந்நாளின் சமூக அமைப்பின் அடிப்படையில்

பார்ப்பனர் வாழும் தெரு, சத்திரியர் வாழும் தெரு, வைசியர் வாழும் தெரு, சூத்திரர் வாழும் தெரு என அமைத்து நாட்டின் பண்பாட்டுடன் இணைத்துப் பின்னணி அமைக்கிறார்.

## முற்றுருவகம் (Allegory)

ஒரு பாடல் முழுவதும் உருவகமாக அமைந்திருந்தால் அதனை முற்றுருவகம் என்கிறது தண்டியலங்காரம். உருவகங்களே ஒரு கதையைத் தொடக்கமுதல் முடிவு வரையிலும் பொருளைப் புலப்படுத்துமானால் அதை முற்றுருவக நூல் என்பர். முற்றுருவகம் பெரும்பாலும் சமயச் சார்புடைய நூல்களில் பயன்படுத்தப்படுகின்றது. ஆனால் முற்றுருவகம் சமயநிலையில் மட்டும் நில்லாமல் இலக்கியப் படைப்பிற்குப் பெரிதும் செல்வாக்குடையதாய் விளங்குகிறது.

முற்றுருவகம் எனும் தொடர் மேம்போக்கான கதையோட்டத்துடன் மறைபொருள் கொண்டுள்ள தொடர்ச்சியான கதையைக் குறிக்கும். இத்தகைய கதைகளில் வரும் கதைத் தலைவனும், பிற கதை மாந்தர்களும் பகை, செருக்கு, மெத்தனம், சாந்தம் போன்ற இயல்புகளின் உருவகங்களே தவிர தனித்தன்மை வாய்ந்த குணச் சித்திரங்கள் அல்ல. குணங்களையே மாந்தர்களாக உருவகப்படுத்துவர். இத்தகைய முற்றுருவகக் கதைகளில் தலைமை மாந்தர் சோதனைகள், சதிகள் முதலிய அனுபவங்களைக் கடந்து வருவது வழக்கம். இதிலுள்ள கதையமைப்பு சித்தாந்தம், கோட்பாடு ஆகியவற்றின் உண்மைகளை வெளிப்படுத்தப் பயன்படும். முற்றுருவகக் கதையை வாசகர் படிக்கும் போது கதையையும் அக்கதை உணர்த்தும் உண்மைத் தன்மையையும் ஒரே நேரத்தில் பின்பற்ற வேண்டும். இருபதாம் நூற்றாண்டில் முற்றுருவகப் படைப்புகளுக்கு அதிக அளவு ஆதரவு இல்லை.

## இரட்சணிய யாத்திரிகத்தில் முற்றுருவகம்

உலக முற்றுருவக இலக்கியங்களுள் Pilgrims Progress தலை சிறந்ததெனக் கருதப்படுகிறது. மேலோட்டமான பொருளில் ஒருவன் உலகத்தில் செய்யும் யாத்திரையைச் சொல்கிறது. ஆனால் உள்ளுறைப் பொருளில் ஒரு கிறித்தவ வாழ்வின் ஆன்மீகத் திருச்செலவை உணர்த்துகிறது. சமயக் கொள்கைகளையும், சமயத் தத்துவங்களையும் மக்களுக்கு எளிதாக விளக்குவதற்கு உருவகக் கதைவடிவமும் உருவகப் பாத்திரப் படைப்பும் மிகுதியாகப் பயன்படும் என்பதை விவிலியத்தின் மூலம் அறிந்து கொண்ட ஜாண்பனியனைப் போல் கிருட்டின

பிள்ளையும் முற்றுருவகத்தைப் பயன்படுத்தினார். முற்றுருவகப் பண்பு இரட்சணிய யாத்திரிக நூல் முழுவதும் காணப்படுகின்றது. இரட்சணிய யாத்திரிகம் எனும் நூலின் பெயரும் முற்றுருவக நிலையிலேயே அமைந்துள்ளது. மட்டுமின்றி நிதானபருவம், இரட்சணிய பருவம் எனும் பெயர்களும் இத்தன்மையன.

இரட்சணிய யாத்திரிகத்தில் தனிப்பட்ட பாடல்களில் வரும் உருவகம், முற்றுருவகம் ஒருபுறம் இருக்க, கிறித்தவ வாழ்க்கையே யாத்திரையாக உருவகம் செய்யப்பட்டுள்ளது. ஈவிரக்கம் இல்லாத ஓர் எதிரியுடன் செய்யும் ஆன்மீகப் போராகவும் உருவகம் அமைக்கப்பட்டுள்ளது. காப்பியமாந்தர், இடப்பின்னணி, நிகழ்ச்சிகள் ஆகியவற்றில் முற்றுருவகம் முழுமை பெற்றுள்ளது.

## காப்பிய மாந்தர்

காப்பியத் தலைவன் தன்னிகரில்லாத் தலைவனாக இருத்தல் வேண்டும். இரட்சணிய யாத்திரிகம் இறைவனைத் தலைவராய் கொண்ட காப்பியமன்று. கிறித்தவன் என்னும் பெயரினைக் கொண்ட காப்பியத் தலைவன் ஆன்மீகவாழ்வில் தன்னை எதிர்த்த சாத்தானின் சோதனைகள் அனைத்தையும் வென்று இரட்சணியத்தைப் பெற்றுத் தன்னிகரில்லாத் தலைவனாக விளங்குகின்றான். நன்மைக்குத் தலைமை மாந்தர் கிறித்தவன்; தீமைக்குத் தலைமை மாந்தர் சாத்தான்.

காப்பிய மாந்தர்களின் பெயர்கள் அனைத்தும் உருவக அடிப்படையில் மக்களின் மனப்பண்புகளைக் குறிப்பிடுவனவாக அமைகின்றன. குணநலன்களையே மாந்தர்களாக உருவகப்படுத்தி உலவவிட்டிருக்கிறார். காப்பியத் தலைவன் கிறித்தவனுக்கு ஆன்மீகன், ஆத்துமவிசாரி, வேதியன், நிவர்த்தன், வித்தகன், மறைக்கிழவன், பகைவன், ஆரியன், மெய்விசுவாசி, செஞ்சொலாரணன், வேதியர் திலகன், மறைவலாளன் என்பன ஆசிரியர் சூட்டியுள்ள பல்வேறு பெயர்கள். கிறித்தவனின் பண்புகளை, பன்முகஇயல்புகளை விளக்கும் வகையில் இப்பெயர்கள் உருவகங்களாக விளங்குகின்றன. இங்கே பாவத்தில் படிந்த ஓர் உயிரே கிறித்தவனாக உருவகம் செய்யப் பட்டுள்ளது. குரு, வன்னெஞ்சன், மென்னெஞ்சன், இலௌகீகன், அறிவீனன், விடாதகண்டன், பாப்பரக்கன், வாய்ச்சாலகன், வியாக்கியானி, நிலைகேடன், சகாயன், சோம்பன், துணிகரன், நிதானன், வெட்கன், சுடுமுகன், நம்பிக்கை, மறைவாணன், விமலன்,

விவேகி, யூகி, பக்தி, சிநேகி என்பன காப்பியத்தில் இடம்பெறும் பிறமாந்தர்களின் பெயர்களாகும்.

## இடங்கள்

நன்மையும் தீமையும் கலந்துதான் ஓர் ஊர் காணப்படும். அவ்வகையில் எழிற்சத்திரம், நாசபுரி, மாயாபுரி, தருமபுரி, தரும சேத்திரம், மரணநிழலின் பள்ளத்தாக்கு, துன்பமலை, ஆனந்தசைலம் என்பன யாத்திரிகத்தில் இடம் பெறும் உருவக அடிப்படையிலான இடங்கள்.

## நிகழ்ச்சிகள்

இரட்சணிய யாத்திரிகத்தில் இடம் பெறும் நிகழ்ச்சிகள் அனைத்தும் உருவக அடிப்படையில் அமைந்துள்ளன. கிறித்தவனும் அழிம்பனும் செய்யும் போர் நன்மை, பரஞானம், ஒளி, நல்லறம் ஆகியவற்றைத் தீமை, அவித்தை, இருள், பாவம் என்பன எதிர்த்துப் போரிடுதல் போன்றது என்பதை

"நன்மை பரஞானம் ஒளி நல்லறம் இவற்றைத்
தின்மை அறியாமை இருள் தீமறம் அடர்த்து
வன்மை மிகு வெஞ்சம மலைத்திடுதல் போலாம்
தொன் மறைவலானொடு பசாசு அமர் தொடுத்தல்"

எனும் பாடல் மூலம் விளக்குகிறார். இப்பாடலில் கிறித்தவனின் பண்பு நலனும் அழிம்பனாகிய சாத்தானின் பண்புநலனும் புலப்படுகிறது. மேலும் ஆதிமாந்தர்களின் பக்தி வாழ்வை விளக்கும் போது அவர்களுடைய அணிகலன்களை ஒழுக்கமாகவும், உடையைத் தூய்மையாகவும், பூசிக்கொள்ளும் மணமிகு சந்தனத்தைக் குற்றமற்ற செயல்களாகவும், அன்பினால் பழுத்த பக்தியை அன்னமாகவும், பானமாகவும் உருவகம் செய்துள்ளார். இதை

"ஒழுக்கமே கலன்களாக உடை பரி சுத்தமாக
இழுக்கறு கருமமேனிக்கு இடுநறுஞ் சாந்தமாகப்
பழுக்கு முன் பக்தியன்ன பானமாகப் பகல்களெல்லாம்
வழுக்கறு மரபிற் போக்கி மாதவம் புரிவர் நாளும்"

எனும் பாடல் மூலம் புலப்படுத்துகிறார்.

## கவிதைச் சிறப்பு

இரட்சணிய யாத்திரிகம் பிறமொழிக் கதையைத் தழுவியதாக இருப்பினும் தன்தரத்தால், செய்யுள் மரபால், தனித்தன்மையால் பெருங்காப்பியத் தகுதியைப் பெறுகின்றது. கவிஞரின் பன்னூல் பயிற்சியும், இலக்கிய ஈடுபாடும், சமய நம்பிக்கையும், தெளிவுமே கவிதையின் சிறப்பிற்குக் காரணங்களாகும்.

நிதானன் மாயாபுரி மக்களுக்குச் சொல்வதாக வரும் அனைத்தும், இவ்வுலகமாம் மாயாபுரியில் வாழும் நமக்குக் கூறப் பட்டவைகளாகும்.

"மண்ணை விழுங்கக் கொதித்தெழும்பி வரும்தீயாற்றைக் கடப்பதற்கு
வெண்ணெய்ப் பாலம் சமைப்பார் போல் வேதநாதன் வெகுளி, சுய
புண்ணியத்தால் தீருமெனப் புலம்பவேண்டா புரை தீர்ந்த
அண்ணலேசு குருதி முகந்து அவிக்க வாரும் ஜெகத்தீரே"

எனக் கவிஞர் உலக மக்களை அழைத்து, தமது பாவங்களைக் கழுவ அறிவுரை கூறுகிறார். கவியரசரின் உவமையாற்றலுக்கு இது ஒரு சான்று. இயேசு கிறிஸ்து மனிதனாகப் பிறந்ததைக் குறித்து நற்செய்தியாளன் கிறிஸ்தியானுக்குக் கூறுகிறான். அந்நிலையில் அவருடைய மனமெல்லாம் இன்ப வெள்ளம் பொங்கி வழிகின்றது. அந்த உணர்வு வார்த்தைகளில் தெரிகின்றது.. நற்செய்தியாளனாக மாறிய கவிஞர்,

"வானோ மகிதலமோ சுடர்மதியோ வயங்கொளிர்வான்
மீனோ விரிகடலோ மழை முகிலோ ஒரு விதியில்
ஆனா நெறி அமைத்தாக்கிய அகிலாண்ட அச்சுதன் ஓர்
ஊனாடிய திருமேனி கொண்டு உதித்தார் உலகு உவப்ப"

எனக் கூறுகிறார். இப்பாடல் கம்பன் கவிதையொடு ஒப்புநோக்கும் வகையில் அமைந்துள்ளது.

தமிழ்க்கிறித்தவப் பெருங்காப்பியமாகிய இரட்சணிய யாத்திரிகம் கிருட்டினபிள்ளையின் மணிமுடிப் படைப்பாக விளங்குகிறது. ஆங்கில இலக்கியத்தில் சிறப்பான ஜாண் பனியனின் முற்றுருவக நூலைத் தமிழ் மரபு போற்றி முற்றுருவகக் காப்பியமாகப் படைத்த பெருமையினை உடையவர் கிருட்டினபிள்ளை. மேலை நாட்டையும் கீழை நாட்டையும் இலக்கியத்தில் இணைக்கும் பாலமாக

இந்நூல் விளங்குகிறது. கிறித்துவின் நற்செய்தியைத் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் புதுமைப் பொலிவுடன் மக்களுக்கு அறிவித்தலே இவருடைய இலக்கியக் கொள்கை.

# தற்காலக் கவிதைகளில் நட்பு

ப.டேவிட் பிரபாகர்

சங்கப் பாடல்களிலும் புலவர்களின் வாழ்விலும் நட்பு பற்றிய செய்திகள் மிகுதி. அகத்துறையில் தோழியும், பாங்கனும் ஆற்றும் பங்கினையும், பிசிராந்தையர், ஔவையார், கபிலர் போன்ற புலவர்கள் மன்னர்களிடம் கொண்டிருந்த நட்பையும் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. வள்ளுவமும் நாலடியாரும் நட்பு குறித்து விரிவாக ஆராய்ந்துள்ளன. பக்திப் பாவலர்கள் நட்பை ஒரு பாவமாக — மார்க்கமாகக் கருதிப்பாடும் மரபைப் போற்றியுள்ளனர். இடைக்காலக் காவியங்கள் கதாபாத்திரங்கள் வழி நட்பைப் பேசுகின்றன.

பண்டைக்கால இடைக்கால இலக்கியங்கள் காட்டும் நட்பானது, தனி ஒருவர் மீது மற்றொருவர் காட்டும் அன்பாகவும், அக்கறையாகவும் அமைகிறது. விட்டுக் கொடுத்தல், தியாகம் புரிதல், இடுக்கண் களைதல், தேவைப்பட்டால் இடித்துக்கூறல் முதலியன நட்பின் இலக்கணமாக வரையறுக்கப்படுகின்றன. தற்காலக் கவிதைகள் காட்டும் நட்பானது, தனி ஒருவர் மீது மற்றொருவர் காட்டும் அன்பு என்ற நிலையிலிருந்து வர்க்க நலனுக்காக, சமூக மாற்றத்திற்காக இணையும் 'தோழமை'யாக வெளிப்படுவதைக் காண முடிகிறது. இந்தத் தோழமையானது விடுதலைப் போராட்ட காலத்தில் சகோதரத் துவமாக உருக்கொள்வதையும், தற்பொழுது பெண்ணிய எழுத்து வளர்ச்சியில் மீண்டும் தோழமையாக அடையாளம் பெறுவதையும் தற்காலக் கவிதைகளில் நட்பு பற்றிய விளக்கமாகவே கொள்ள இயலும்.

பெண்ணை மண்ணாக உருவகிக்கிற மரபு, வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தது என்றாலும், நாட்டைத் தாயாகவும், மக்களை அதன் புதல்வர்களாககவும் பாவித்து சகோதரத்துவம் பேசுவது தற்கால இலக்கியப் போக்கேயாகும். இப்போக்கு பிரெஞ்சுப் புரட்சிக்குப்பின் முறையாக வளர்ந்ததை அறிகிறோம். இதிகாசத் தழுவலாக எழுந்த ஒரு சில படைப்புகள் தவிர, சங்க இலக்கியம், நீதி நூல்கள் போன்ற பிறவற்றில் சகோதர உறவை வற்புறுத்தும்

நிலையினைக் காணமுடியவில்லை. 'தோழன்' என விளித்துப் பேசுவதை மார்க்சிய எழுத்துக்களிலும், 'தம்பீ' என விளித்துப் பேசுவதைத் திராவிடபாணி படைப்புகளிலும் ஒரு பாவமாகக் கையாள்வதைத் தற்கால இலக்கியங்களில் காண முடிகிறது.

சமூகப் பொது நலனுக்காக இணையும் தோழமையைப் பேசும் அதே சமயம், பொது நோக்கத்திற்காகவும், தனிப்பட்ட அன்புக்காகவும் தனிப்பட்ட மனிதர்களுக்கிடையே மலரும் நட்பும் தற்கால இலக்கியங்களில் உயிர்ப்போடு பதிவு செய்யப்பட்டுள்ளது.

தொழில், கல்வி முதலிய காரணங்களால் 'இடம் பெயர்தல்' என்பது தவிர்க்க இயலாத அம்சமாகிவிட்ட இன்றைய வாழ்வில் தம் நட்பை—நண்பர்களை நினைத்து ஏங்கும் நிலையினையும் தற்கால இலக்கியங்கள் காட்டுகின்றன.

தமிழில் நவீனத்துவ எழுத்து வகையைத் தொடங்கி வைத்த பாரதி தம்முடைய பாரதி— 66 இல் தம் நண்பர் குவளைக்கண்ணனை நன்றியோடு நினைவு கூர்கிறார்.

சூரியதாஸ் என்னும் கவிஞர் "வாழ்க்கைப் பாடலில் வந்து கிடைத்த பாடல்" என்னும் தலைப்பில் அமைந்த தம்முடைய கவிதையில் நண்பனை நினைவுகூறும் அடிகள் குறிப்பிடத்தக்கவை.

'கீழே விழுந்து
காயங்களோடு வந்தபோது
கட்டுப்போட்டவனல்ல நீ
உன் தசையை எடுத்து
ஒட்டுப் போட்டவன்'

மேலும்,

சிலவற்றை எனக்குக்
கற்றுக் கொடுத்திருக்கிறாய்
சிலவற்றை எனக்காக
விற்றும் கொடுத்திருக்கிறாய்

என வரும் அடிகள் இடுக்கண் களையும் வள்ளுவ நட்பையே நினைப்பூட்டுகின்றன.

நண்பர்கள் கூட்டத்தில் பகைவர்களும், பகைவர்கள் கூட்டத்தில் நண்பர்களும் இருப்பதைப் புரிந்து கொள்ள இன்னொரு

வாய்ப்பு கிடைக்காதா எனத் தமது கவிதையொன்றில் கேட்கும் பு. ஜார்ஜ், தம்முடைய மற்றொரு கவிதையில்,

ஊதிக் கொண்டேயிருந்தேன்
சாம்பல் பூக்கக் கூடாதென்று
சாம்பல் பூக்காமலேயே
சாம்பலானது
நட்பு

என, உயிர்ப்பிக்க முயன்று தோற்றுப்போன தன் நட்பின் அனுபவத்தை நயத்துடன் பதிவு செய்துள்ளார்.

வேறு யாரோ ஒருவரின் நடையைப் பார்த்து விட்டு, இறந்து போன தன் நண்பனாகக் கருதி, அவன் மீண்டும் வரக்கூடும் என நினைக்கும் 'நம்பிக்கை' கவிதையிலும், 'இல்லாதபோது வரும் நண்பன்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையிலும் பசுவய்யாவின் நட்பைக் காண முடிகிறது.

தம்முடைய மரணத்தை நினைத்து தம்முடைய நண்பனுக்கு எழுதும் கடிதமாக அமைந்த பசுவய்யாவின் கவிதை உருக்கமானது. 'என் நினைவுச்சின்னம்' என்ற அந்தக் கவிதை பின்வருமாறு,

நான் விடைபெற்றுக் கொண்டுவிட்ட செய்தி
உன்னை வந்து எட்டியதும்
நண்ப
பதறாதே
ஒரு இலை உதிர்ந்ததற்கு மேல் எதுவும் அதில் இல்லை.

இரங்கற்கூட்டம் போட ஆள்பிடிக்க அலையாதே
இருப்பினும்
நண்ப
ஒன்று மட்டும் செய்
என்னை அறியாத உன் நண்பனிடம்
ஓடோடிச் சென்று
கவிதையை எழுப்ப முயன்று கொண்டிருந்தவன்
மறைந்து விட்டான் என்று மட்டும் சொல்
இவ்வார்த்தைகளைக் கூறும் பொழுது
உன் கண்ணீர்
ஒரு சொட்டு
இந்த மண்ணில் உதிரும் என்றால்
போதும் எனக்கு!

தன் இறப்பிற்குப் பிறகு தன் நண்பனிடம் கவிஞர் எதிர்பார்ப்பது ஒரு சொட்டுக் கண்ணீர்தான்.

எதிர்பாலினருடன் கொள்ளும் நட்பும், அந்த நட்பிற்குக் காதலனால் தடை ஏற்படும் போது, அந்தக் காதலையே தூக்கி எறியும் நிலையைப் பாரதிகண்ணம்மாவின் கவிதைகளில் காண முடிகிறது.

'நட்பிற்குக் கூட
சிக்கனம் பேசி
சிறையிடுவதை விடுத்து
மானுடம் பாட கற்றுக்கொள் முதலில்' — எனத்

தன் காதலனை நோக்கிக்கூறும் கண்ணம்மா.

உனக்கும் எனக்கும்
ஒத்துவராத காதலை
உடைத்துப் போடுவோம்!
உன்னதமான உணர்வுக்குள்
மூச்சுத் திணறாமல் மூழ்கி
நாகரிக நட்புக்குள்
நண்பர்கள் ஆவோம்!

எனக் கேட்டுக் கொள்கிறார்,பாரதி கண்ணம்மா.

தன் தாயின் கண்ணீரை விடவும் தோழனின் இரத்தம் வலிமையாக இருப்பதை வ.ஐ.ஜெயபாலனின் கவிதை காட்டுகிறது. 'அம்மாவுக்கு மகள் எழுதிய கடிதம்' எனும் தலைப்பில் அமைந்த அந்தக் கவிதை

நீ சிந்தும் கண்ணீருக்கு வலிமை இல்லை அம்மா
ஏனெனில்
எனது தோழர்கள் சிந்துவது இரத்தம்.
உன் அழுகைக்கு ஒலி இல்லை அம்மா
ஏனெனில்
எனது அயலெல்லாம் மரண ஓலம்
..................................................................................................
நரைத்த தலையும் பரம்பரைப் பெருமையுமாகச்
செல்விகளாக எத்தனைப் பெண்கள் நசிந்து போய்
இப்படி நானும் வீழ்வேனென்று
நினைத்தனையோ ?

பொன் முலாமிட்ட தமிழரின் கவுரவமெல்லாம்
கறுத்துப் போனது அம்மா.
ஒவ்வோர் வீட்டு ரொட்டித்துண்டிலும்
பெண்களின் வியர்வை.
தோட்ட நிலங்களில் நமது வியர்வை
தொழிலகங்களில் நமது வியர்வை
தடைகளை உடைத்து போர்க் கோலத்துடன்
ஊர்வலம் போகும் கொதிப்பில் எல்லாம்
பாதிக்கு மேலே பெண்கள் அம்மா

................. ............ ...................... ......................... ..

அண்ணன் ஜெர்மனி சென்றதும்
நான் பல்கலைக்கழகம் செல்வதும்
பொய்யென உனக்குத் தெரியுமா அம்மா ?

இ.ன்று நாமெல்லாம்
விரிவுரை எடுக்கும் காலம்

உன்னால் எம்மைக் காட்டிக் கொடுப்பது
இயலுமா அம்மா ?

உன் கண்ணீரை விடவும் தடித்தது அம்மா
தோழரின் இரத்தம்

*மனித உறவைக் கடந்து குரோட்டன்ஸ் செடிகளோடும் கொள்ளும் நட்புறவைப் பழம்லய் கவிதைகள் காட்டுகின்றன.*

*காதலுக்குத் துணையாகக் கொள்ளப்பட்ட நட்பு, இன்று நட்புக்காகக் காதலையே துறக்கும் எதிர்நிலை பெறுவதையும், குறுகிய நலன்களில் சிறைப்படுத்திக் கொள்ளாது மானுடம் பாடும் தோழமையை உணர்த்தும் நிலையை அடைவதையும், அதையும் கடந்து சுற்றுச் சூழலோடு நட்பு கொள்வதையும் தற்காலக் கவிதைகள் காட்டும் நட்பின் பரிணாமமாக அறியலாம்.*

# கருத்துப் புலப்பாட்டில் நாட்டுப்புறப் பாடல்கள்

*சா. சவரிமுத்து*

*பழங்காலத்தில் மொழி தோன்றாத நிலையில் மனிதன் தன் கருத்தை முதலில் சைகைகள் மூலம் தெரிவித்தான். இரவில் சைகைகள் மூலம் கருத்தைத் தெரிவிக்க முடியாது. ஆகவே தன் குரல் ஒலியைப் பயன்படுத்தத் தொடங்கினான். இரவில் மட்டும் குரல் ஒலியைப் பயன்படுத்துவதுடன் நில்லாது, பகலிலும் 'சீட்டி' ஒலி போன்ற ஒலிகளைப் பயன்படுத்தித் தகவலைச் சொன்னான். ஏனெனில் சைகைகள் மூலமே தன் கருத்தைத் தெரிவிப்பது சிறிது தொலைவில் இருப்பவர்களுக்குப் புரிந்து கொள்ள இயலாது. அத்துடன் அவன் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது கருத்தைத் தெரிவிக்க வேண்டுமாயின் தன் வேலையை நிறுத்தி விட்டுச் சைகை காட்டவேண்டும். இதனால் தொழில் பாதித்ததை உணர்ந்தான். எல்லா வேலைகளிலும் குரல் ஒலியையே பயன்படுத்தத் தொடங்கினான். எந்த நேரத்திலும், எந்நிலையிலும் இடையூறு இல்லாத கருத்துப் புலப்பாட்டுக் கருவியாக ஒலி அமைந்திருப்பதை அறிந்தான். நாளடைவில் அதனையே பேசும் கருவியாக மாற்றிக் கொண்டான். இவ்வாறு கருத்துப்புலப்பாடு தொடக்ககால மனிதனிடமிருந்து இன்று பல்வேறு படிநிலைகளில் மாற்றம் பெற்றுள்ளது. இந்நிலையில் நாட்டுப்புறவியலில் கருத்துப்புலப்பாடு பயன்படுவது பற்றி இக்கட்டுரை விளக்குகிறது.*

## கருத்துப்புலப்பாடு (Communication)

*ஒருவரிடமிருந்து அடுத்தவருக்குக் கருத்தை—தகவலைக் கொண்டு சேர்ப்பது கருத்துப்புலப்பாடாகும். கருத்தை வெளிப்படுத்திக் கொண்டு செல்லும் கருவி — ஊடகம் (Medium) ஆகும். பேச்சுமொழி வாயிலாகவும், பேச்சுமொழி இல்லாமலும் ஒரு கருத்தைப் பிறருக்குத் தெரிவித்துக்கொள்ள முடியும்.*

சைகைகள் மூலமாகக் கருத்தைத் தெரிவித்தல், முகக்குறிப்பால் கருத்தைத் தெரிவித்தல், சாலை ஓரங்களில் உள்ள குறிப்புப் பலகையினால் கருத்தைத் தெரிந்து கொள்ளுதல் ஆகிய இவையெல்லாம் குறியீடு (Symbol) குறி (Sign) ஆகியவற்றின் மூலமாகக் கருத்தைப் புலப்படுத்துதல் என்று கொள்ளலாம். வெள்ளை ஆடை அணிந்து வரும் பெண்ணையும், நெற்றியில் திலகம் வைக்காத பெண்ணையும் 'விதவை' என்று தெரிந்துகொள்கிறோம். நெற்றியில் நாமம் வரைந்திருப்பவர் 'வைணவர்' என்றும் பட்டை போட்டிருப்பவர் 'சைவர்' என்றும், கழுத்தில் சிலுவை அணிந்திருப்பவர் 'கிறித்தவர்' என்றும் புரிந்துகொள்ள முடிகிறது. இவைகள் யாவும் பார்வையால், மொழிக்குறுக்கீடு இன்றி அறிந்துகொள்ளும் — கருத்தைப் புலப்படுத்தக் கூடியவைதாம். இக்கருத்துப் புலப்பாட்டிற்குப் பேச்சு மொழி பயன்படுவதில்லை.

நாகரிக உலகில் மொழியே ஒரு மனிதனின் உயிர்நாடி. பேச்சுமொழி பல வடிவங்களில் காணப்படுகிறது. இதனால் இவன் 'தமிழ்பேசுபவன்' இவன் 'மலையாளம் பேசுபவன்' என்று பிரித்துப் பார்க்க முடிகிறது. எனவே, மனிதன் தன் கருத்தை அந்தந்த மொழி பேசுவோரிடம் அந்தந்த மொழியிலேயே வெளிப்படுத்துகின்றான்— கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறான். கோழி 'குக் குக் குக்' என்று கத்துகிறது. அந்த ஒலியைக் கேட்ட குஞ்சுகள் தன் தாய்க் கோழியிடம் 'இரை' உள்ளது என்பதை அறிந்து கொள்கிறது. எனவே, கோழியும் பேசுகிறது. அதன் பேச்சுமொழி அவ்வினக் குஞ்சுகளுக்குப் புரிகிறது. இவ்வாறு கருத்துப்புலப்பாடு மொழி மூலமாகப் பயன்படுவது வெளிப்படையாகிறது. இவையெல்லாவற்றிலும் கருத்துப் புலப்பாட்டில், எழுத்து வடிவமே நிலையானதும் சிறப்பானதும் ஆகும். எழுத்து இல்லையென்றால் நாம் இன்று படிக்கும் இலக்கியங்களை அறிந்திருக்க முடியாது.

பழங்காலத்தில் அரண்மனையிலிருந்து அரசு அறிவிப்புகள், கட்டளைகள் பொதுமக்களுக்குப் பறையறிவிப்பதன் மூலம் தெரிவிக்கப்பட்டன. தமிழகத்தில் அரசர்கள் முரசறைந்து அரண்மனைச் செய்திகளை மக்களுக்கு அறிவிக்கச் செய்தார்கள். மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த நாயக்க மன்னன் செய்தியை அறிவிப்பதற்கு மதுரையிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் வரை ஒரு கல் தொலைவிற்கு ஒரு கோயில் எழுப்பி மணி அடித்து அதன்மூலம் செய்தி அறிவித்தான். தூது அனுப்புதல் மூலமும் கருத்துப் புலப்பாடு

ஏற்பட்டுள்ளது. தூது, பறவைகள் மனிதர்கள் மூலமாக அனுப்பப்பட்டுள்ளது. தற்பொழுது கப்பற்படையினர் விளக்கு வெளிச்சத்தைக் காண்பித்தும், சாரணர் கொடிகளை அசைத்தும் செய்திகளை அனுப்புகிறார்கள்.

கருத்துப் புலப்பாடு மனித வளர்ச்சிக்கு ஏற்ப வளர்ச்சி யடைந்து வந்துள்ளது. நாம் பிறருக்குக் கடிதம் எழுதுவது ஒரு கருத்துப் புலப்பாடேயாகும். தொலைபேசி மூலமாகவும், தொலைவரி மூலமாகவும், டெலக்ஸ் மூலமாகவும், துணைக்கோள்கள் மூலமாகவும், கருத்துப் புலப்பாடு ஏற்பட்டுள்ளமை மனித வளர்ச்சியைக் குறிக்கிறது.

## நாட்டுப் புறவியல் கருத்துப் புலப்பாடு

தமிழகத்தில் நாட்டுப்புறங்களில் — ஊர்களில் மிக நெடுங் காலமாகச் செய்திகளைப் பாட்டாகத் தெருவில் பாடிச் செல்லும் வழக்கம் இருந்திருக்கின்றது. இப்பாடல்கள், நாட்டுப் புறப்பாடல்கள் அல்லது வாய்மொழிப் பாடல்கள் எனப்படும். நாட்டுப்புறவியலாவது, நாட்டுப்புற மக்களின் கலை, பண்பாடு, நாகரிகம், தொழில் போன்ற பல்வேறு கூறுகளைக் கொண்ட கூட்டுத் தொகையாகும். மக்களிடையே கருத்துப் புலப்பாட்டு ஊடகங்களாக மரபு வழியாகப் போற்றிப் பாதுகாக்கப்படுவது நாட்டுப்புறப் பாடல்கள் ஆகும். நாட்டுப் புறக்கலைகள் — ஒயிலாட்டம், கும்மி, கோலாட்டம், பொம்மலாட்டம், தெருக்கூத்து, கதாகாலட்சேபம் போன்றவை மரபுச் சாதனங்களில் அடங்கும். இங்கு நாட்டுப்புறப் பாடல்கள் வழி கருத்துப் புலப்பாடு ஏற்படுவது ஆராயப்படுகிறது.

## தாலாட்டு

மனிதன் கேட்கும் முதல்பாட்டு தாலாட்டு ஆகும். தாய் தன் குழந்தையைத் தூங்க வைப்பதற்காகத் தாலாட்டுப் பாடுகிறாள். பேசவே தெரியாத குழந்தைக்குப் பாட்டுப்புரியும் என்ற நோக்கில் பாடவில்லை. மாறாக தன் துயரத்தைக் குழந்தை கண்டு கொள்ளும் என்று நினைக்கிறாள்; தன் கணவன் கண்டு கொள்வான் என்று நினைக்கிறாள்; ஊரார்க்குத் தன் துயரம் பரவும் என்று நினைக்கிறாள். இதுவரை அவள் பட்ட துயரையெல்லாம் — கேட்ட ஏச்சையெல்லாம் பாட்டில் வடித்துக் கொடுக்கிறாள். அப்பாட்டு இதுதான்

"வாடிய நாளெல்லாம் வருந்தி வருந்தித் தவமிருந்து
தேடியநாள் தன்னில் செல்வமாய் வந்த கண்ணே
மலடி மலடி என்று வையகத்தார் ஏசாமல்
மலடி என்ற சொல்லை மாற்றப் பிறந்தாயே"
(இரா. சுரேந்திரன், 1981)

*நீண்ட நாளாகக் குழந்தைப்பேறு இல்லாது இருந்த இத்தாயை அச்சமுதாயம், 'மலடி' என்று கேலியும், கிண்டலும் செய்திருக்கிறது; மாமியார் திட்டியிருக்கிறார்; கணவன் மறுமணம் செய்து கொள்வேன் என்று மிரட்டியிருக்கிறான்; அச்சமயத்தில் இக் குழந்தை பிறந்தது அவளுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது. ஆகவே, இச்செய்தியை — தகவலை — கருத்தை எல்லோரும் அறிய தாலாட்டின் வழி புலப்படுத்துகிறாள்.*

## ஒப்பாரி

*இறந்தவருக்காக வருந்திப்பாடும் பாடல்கள் ஒப்பாரிப் பாடல்களாகும். கணவன் இறந்தால் தான் படப்போகும் துன்பத்தைத் தன் உறவினர்களுக்கும் குறிப்பாக, அண்ணன் தம்பியர்க்கும் ஊரார்க்கும் சொல்ல நினைக்கிறாள். அதையே 'ஒப்பு' வைத்து அழுகிறாள்.*

"தோணி வருகுதுண்ணு
துறைமுகமே காத்து இருந்தேன்
தோணி கவுந்திருச்சே
துறைமுகம் ஆசை இல்லை
கப்பல் வருகுதுண்ணு
கடற்கரையே காத்து இருந்தேன்
கப்பல் கவுந்திருச்சே
கடற்கரையே ஆசை இல்லை"
(பா.ரா. சுப்பிரமணியன், 1975)

*தோணியும், கப்பலும் கவிழ்ந்தது போலத் தான் எதிர்பார்த்திருந்த சீரான வாழ்க்கையும் குலைந்து போய்விட்டதே! என் குழந்தைகளின் எதிர்காலம் என்னவாகுமோ? இனி எப்படி வாழப்போகிறோம்? என்று தன் நிலையினைப் பிறர் அறியச் செய்யவும் மன அமைதி பெறவும் இவ்வாறு அழுது புலம்புகிறாள். இங்கு ஒப்பாரி மூலம் கருத்துப் புலப்பாடு ஏற்படுகிறது.*

## ஏற்றப்பாட்டு

ஏற்றத்தை ஒருவராக இறைப்பதும் உண்டு. இருவர் அல்லது மூவர் சேர்ந்து இறைப்பதும் உண்டு. காதற்பாடல்கள் ஏற்றப்பாட்டில் இடம்பெறும். இக்காதற் பாடல்களை வயல்வெளியில் வேலை செய்து கொண்டிருக்கும் பெண்களுக்காகக் குறிப்பாகப் பாடுவர். ஏற்றப்பாட்டில் மிகுதியாக உழவுத் தொழிலின் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் வருணித்துப் பாடுவர். ஏற்றம் இறைக்கும் பொழுது அவர்களுக்கு அயர்வு தோன்றாமலிருப்பதற்காக இவ்வாறு பாடல்களைப் பாடியுள்ளனர்.

ஏற்றம் இறைக்கும் இறவைப் பெட்டியின் அசைவிற்கேற்ப ஏற்றப்பாட்டின் ஒலியும் அமையும். அத்துடன் எத்தனை முறை இறைத்துள்ளோம் என்று கணக்கிட்டுக் கொள்வதற்கு ஒவ்வொரு முறையும் 'சால்' இறைக்கும்போதும் ஒன்று, இரண்டு என்று எண்ணிக்கொள்வர்.

"சித்தாடை கட்டிருக்கு – வேலையா
சின்னகுட்டி போலிருக்கு – சுப்பையா
கண்ணாடி தோற்குமா – வேலையா
கண்ணைப் பறிக்குதோடா – சுப்பையா
காத்தெனவே பறந்துவாரா – வேலையா
கஞ்சிகொண்டு வாராளோடா – சுப்பையா
அன்னம் போல் முன்னேவாரா – வேலையா
அவள் என் அத்தை மவரத்தினம்பா – சுப்பையா
அவள் உரிமையுள்ள புருசனும் நீ – வேலையா
அடுத்தமாசம் பரிசம் வைப்பேன் – சுப்பையா"
(கி.வா. ஜகந்நாதன், 1944)

இப்பாடலில் வேலையாவின் காதலி வருவதைக் கண்டு சுப்பையா செய்தி சொல்கிறான். ஏற்றம் இறைக்கும் வேலையாவுக்குச் செய்தி எட்டி, அவனும் பார்த்து அடையாளம் காண்பதாக இப்பாட்டு அமைந்துள்ளது. இதுபோன்றே வண்டிக்காரன் பாடும் தெம்மாங்குப் பாடல்களும் தகவல் தொடர்புக்குப் பயன்படுகின்றன.

## கதைப்பாடல்கள் வழி கருத்துப்புலப்பாடு

கதைப்பாடல்கள் மக்களுக்குக் கருத்தைப் புலப்படுத்துவதற் காகவே – தகவலைச் சொல்வதற்காகவே படைக்கப்படுகின்றன. சிலப்பதிகாரக் கதைப்பாட்டும் – கண்ணகி கதைப்பாட்டும் மன்னன்

செங்கோன்மை தவறாது ஆட்சி செய்ய வேண்டும்; மாறாக நடந்தால் நாடு கேடுறும் என்ற எண்ணத்தைத் தான் தகவலாக மக்களுக்குக் கூறுகின்றன. இதுபோன்றே தனுஷ்கோடி புயல்பாட்டு, மணிக்குறவன் பாட்டு, பசும்பொன் தேவர்பாட்டு ஆகியவையெல்லாம் ஏதோ ஒருவகையில் மக்களுக்குக் கருத்தைப் பரப்பி படிப்பினையைக் கூறுகின்றன.

கதைப்பாடல்களைத் தெருக்கூத்து, கணியான் கூத்து ஆகிய கூத்துக் கலைகளின் வழியாகவும், வில்லுப்பாட்டு, உடுக்கடிப்பாட்டு, பம்பைக்காரன் பாட்டு ஆகிய ஊடகங்கள் வாயிலாகவும் கூறிக் கருத்துப் புலப்பாடு ஏற்படுத்துகிறார்கள்.

## விடுகதைகள்

'விடுப்பது' எனில் 'சொல்வது' எனப் பொருள் கொள்ளலாம். இலக்கியத்தில் விடுகதை 'புதிர்' என வழங்கப்பெறுகிறது. விடையை மூடி மறைத்துக் கூறும் இதனைத் தொல்காப்பியர் 'பிசி' என்று குறிப்பிடுகின்றார். விடுகதைகள் நாட்டுப்புற மக்களின் அறிவுக்கு ஒரு பயிற்சியாகும்; அவர்களின் சிந்தனையைத் தூண்டும் ஒரு கருவியாகும். நாட்டுப்புற மக்களின் அறிவை அளக்கப் பயன்படும் அளவுகோல் விடுகதை ஆகும்.

"தன்னைத்தான் பலிகொடுப்பான்
மற்றவர்க்கு ஒளி கொடுப்பான்" (மெழுகுவர்த்தி)

மேற்கண்ட விடுகதை மனித சமுதாயம் எவ்வாறு வாழவேண்டும் என்று உணர்த்துகிறது.

"முதன்முதல் கற்றபொருள்
முடிவிலும் அறியாப் பொருள்" -- (கடவுள்)

கடவுள் முதலும் முடிவும் அறியமுடியாத முதற்பொருள் என்பதை மக்கள் உள்ளத்தில் நிறுத்துவதற்காக மேற்கண்ட விடுகதை பயன்படுகிறது. இவ்வாறு மக்களுக்கு மறைமுகமாக— உள்ளுறையாகக் கருத்துகளைச் சொல்லி சிந்தனையை எழுப்புகிறது விடுகதை.

## பழமொழி

நாட்டுப்புற வழக்காறுகளில் மற்றொன்று பழமொழி. பழமொழி விடுகதைபோல் அமைந்து அறிவுறுத்தும் இலக்கிய வகையாகக் காணப்படுகிறது. சுருங்கச்சொல்லி விளங்க வைத்தல் பழமொழியில் காணப்படும் உத்திகளுள் ஒன்று. 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' போன்ற தெய்வ நம்பிக்கைகளை மக்கள் மத்தியில் வேரூன்றச் செய்யும் பழமொழிகள் பல உண்டு. "ஆடிப்பட்டம் தேடி விதை" என்ற பழமொழி, காலத்தே பயிர்செய்வதன் தேவையை மக்களுக்கு உணர்த்தும் தகவல் தொடர்பாகிறது.

"கல்லாதான் கண்ணில்லாதவன்"
"மனைவியில்லாத புருசன் அரைமனிதன்"
"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"
"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி"
"உப்பிட்டவரை உள்ளளவும் நினை"
(கழகப் பழமொழி)

இப்பழமொழிகள் கல்வியின் பெருமை, திருமணம், இல்லறநெறி உறவுகள், மருத்துவம், அறிவுரை போன்ற கருத்துகளைத் தெரிவிக்கின்றன. இப்பழமொழிகள் நாட்டுப்புற மக்களின் வாழ்வியலில் காணப்படுகின்றன. இவை அனைத்துமே நாட்டுபுற மக்களின் கருத்துப் புலப்பாட்டுக்குரிய ஊடகங்களாகின்றன.

தொகுத்துக் கூறும் போது, கருத்துப் புலப்பாடு விளக்கப் பட்டது தெரிகிறது. கருத்துப் புலப்பாட்டில் ஊடகங்கள் சொல்லப்பெற்று, அவற்றில் மரபுச்சாதனமாகத் தொன்றுதொட்டு வழங்கிவருவது நாட்டுப்புறவியலாகும் என்பது பெறப்பட்டது. நாட்டுப்புறப் பாடல்கள், கருத்துப் புலப்பாட்டிற்குப் பயன்படும் பாங்கும் தெளிவாக்கப்பட்டது.

## துணைநூற் பட்டியல்

1. சம்பந்தன், மா.சு., *"தமிழ் இதழியல் வரலாறு"*, தமிழர் பதிப்பகம், சென்னை, 1987.

2. சுரேந்திரன், இரா., *"நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம்"*, தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1981.

3. சுப்பிரமணியன், பா.ரா., *"தமிழக நாட்டுப்புறப் பாடல்கள்"*, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1975

4. ரோஜா முத்தையா (தொ.ஆ), *"விடுதலைக் களஞ்சியம்"*, பாவை நிலையம், காரைக்குடி, 1966

5. ஜகந்நாதன், கி.வா., *"நாடோடி இலக்கியம்"*, கலைமகள் காரியாலயம், சென்னை, 1944.

6. *கழகப் பழமொழி அகரவரிசை*, கழக வெளியீடு, சென்னை, 1970.

# மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை

பு. ஜார்ஜ்

அகல்யா என்று பாரதிதாசனால் அழைக்கப்பட்டவர் அ.கல்யாணசுந்தரம். இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள பட்டுக் கோட்டை வட்டத்தில் செங்கப்படுத்தான்காடு கிராமத்தில் 13.04.1930இல் பிறந்தார். பிறந்த மாவட்டத்தைக் கொண்டு இவர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் என்றே அழைக்கப்பட்டார். பாரதியில் பெரும் ஈடுபாடும் பாரதிதாசனில் பற்றும் கொண்டிருந்த பட்டுக்கோட்டை, பாரதிதாசனின் தலைமையில் தமது திருமணத்தை நடத்தியவர்.

பட்டுக்கோட்டையின் பாடல்கள் வழி அவரது அரசியல் நிலைப்பாடும், அதன் ஊடாகப் பெண்கள் குறித்தும் சமயம் குறித்தும் அவர் கொண்டிருந்த பார்வையும் இக்கட்டுரையில் பதிவு செய்யப் படுகின்றன.

இந்தியச் சுதந்திரத்தின் போராட்டச்சூடு முழுதும் ஆறிப் போய்விடாத சூழலும், இப்போராட்டத்தின் ஊடாகவே உருவெடுத்த திராவிட இயக்க உணர்வுகள் புதிதாகத் தமிழ் மக்களைச் சூடுபடுத்திக் கொண்டிருந்த சூழலும் நிறைந்த காலப்பகுதியான 1950களில், அதிலும் குறிப்பாக அதன் பிற்பகுதியில்தான் பட்டுக்கோட்டை திரையிசைப் பாடல்கள் அதிகம் எழுதியுள்ளார். திராவிட இயக்கத்தினர் புதிதாகக் கிடைத்த திரைப்படத்துறையை முக்கிய பிரச்சார வடிவமாகப் பயன்படுத்திக் கொண்டனர். திராவிட இயக்கத்தினர் பொதுவுடைமைக் கொள்கையைப் பேசிய சூழலைப் பாரதிதாசனிலும் காணமுடியும்.

இந்த பின்னணியில் பேராசிரியர் கைலாசபதி குறிப்பிடுவது[1] போல தேசியம், திராவிடம் ஆகியவற்றில் பட்டுக்கோட்டை முரண் பட்டிருந்தார். ஆனாலும் அந்தச் சக்திகளோடு இணைந்து பொது வுடைமைக் கொள்கையின் அடிப்படையில் தமது ஆளுமையை வெளிப்படுத்தியுள்ளார். அவர்களும் இவரைப் பயன்படுத்திக்

கொண்டனர். இவருக்குப் பின் இவரது பாணியில் எழுதவும் பிறர் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளனர். திராவிட இயக்கத்தில் சிறிதளவே வெளிப்பட்ட வர்க்கப் பார்வை அதன் பிற்கால வளர்ச்சியில் மழுங்கடிக்கப்பட்டது. அந்தத் தொடக்ககால ஒற்றுமைப் பண்பில் திராவிடத்தோடு தொடர்பு கொண்டுள்ள பட்டுக்கோட்டையிலோ வர்க்கப்பார்வை கூர்மை அடைந்துள்ளது. இதனை அவரது பாடல்கள் வெளிப்படுத்துவதை இக்கட்டுரையின் பிற்பகுதியில் காணலாம்.

ஆதிக்க வர்க்கத்துக்குத் தோள் கொடுக்கும் நமது கவிஞர்கள் கம்பன், செக்காவ் முதலானவர்கள் வந்தால்கூட இந்தச் சினிமா அவர்களை இப்படித்தான்—இவர்கள் எழுதுகிற மாதிரி— எழுத நிர்ப்பந்திக்கும். எனச் சொல்லிக்கொண்டு தமது சுயலாபத்துக்கு நியாயத்தைக் கற்பித்துக் கொள்கிறார்கள். பட்டுக்கோட்டை,

> பசிக்குறி முகங்களைப் பாட்டாளி வர்க்கத்தை
> நசுக்கிப் பிழிந்திடும் அராஜகச் செயலை
> மாற்றிடும் கருத்தைத் தமிழ்ப்பட உலகம்
> வண்மையாய் உரைக்க அஞ்சும் நடுங்கும்[2] (158)

எனக் குறிப்பிடுவது போல, இவர்கள் அஞ்சிக் கொண்டிருக்கும் வேளையிலே, சுரண்டும் வர்க்கத்தை எதிர்ப்பதையே தன் வாழ்நாள் கொள்கையாகக் கொண்டிருந்து வீறுமிக்க பாடல்களைத் திரைப் படத்துக்கு எழுதியவர் பட்டுக்கோட்டை.

திண்ணைப்பள்ளியில் பயின்ற பட்டுக்கோட்டைக்கு மா மேதைக்கும் புரியாத இவ்வளவு பெரிய கொள்கைகள் எளிமையாகப் புரிந்திருப்பதற்குக் காரணம், அவை வாழ்க்கையைப் பேசுகின்றன என்பதுதான். என்னவிதமான வாழ்க்கை? ஒன்று, பலகோடி மக்களைச் சுரண்டி வாழும் வாழ்க்கை; இரண்டு, இவர்களின் சுயநல வாழ்வுக்காகச் சுரண்டப்பட்டு பஞ்சைகளான பலரது வாழ்க்கை. இந்த இரண்டாம் வகையினரில் தாமும் ஒருவராகப் பட்டுக்கோட்டை இருந்துள்ளார். விவசாயி; மாடுமேய்ப்பவர்; மாடு, மாம்பழம், இட்லி, முறுக்கு, தேங்காய், கீற்று ஆகியன விற்கும் வியாபாரி; மீன் நண்டு பிடிக்கும் தொழிலாளி; உப்பளத் தொழிலாளி; எந்திர ஓட்டுநர்; தண்ணீர் வண்டிக்காரர்; அரசியல்வாதி; பாடகர்; நடிகர், நடனக்காரர் ஆகியவற்றோடு கவிஞராகவும் பட்டுக்கோட்டை இருந்தார் என்பார் ஜீவானந்தம்.[3] மக்கள் வாழ்க்கையைப் புரிந்து கொள்ளவே பட்டுக்கோட்டை இப்படி வாழ்ந்திருக்கிறார். இதனை,

வெளியே படிக்கவேண்டியது நெறய இருக்கு
படிச்சுட்டு வாரேண்டா– சிலர்
படிக்க மறந்தது நெறய இருக்குப்
படிச்சுட்டு வாரேண்டா (59)

என அவரே குறிப்பிடுவதால் உணர முடிகிறது. ஒரு படைப்பாளன் இப்படித்தான் பயில வேண்டும் என்பதை மா.சே.துங்,

இலக்கியத்திற்கும் கலைக்கும் மூலப் பொருள்களின் சுரங்க மலைபோல் உதவுவது மக்களின் வாழ்க்கையாகும். அந்த மூலப் பொருள்கள், இயற்கை ரூபத்தில் பட்டை போடாத நிலையில் இருக்கின்றன. ஆனால் அவைகளில் ஜீவன் இருக்கிறது. அவை ஜீவாதார மாணிக்கம் போன்றவைகளாகும். பொய்யும் புனைசுருட்டும் நிறைந்த இலக்கியத்தையும் கலையையும் அவைகள் சந்தி சிரிக்க வைத்து விடும். ஜீவகளை ததும்பும் இலக்கியத்திற்கும் கலைக்கும் அள்ள அள்ளக் குறையாத விஷயக்குவியலைக் கொண்டுள்ள பொக்கிஷமாக விளங்குவது மக்களின் வாழ்க்கை ஒன்றுதான். அதுதான் பொக்கிஷமே யன்றி வேறு மூலப்பொருள் உள்ள சுரங்கம் எதுவும் இருக்க முடியாது.[4]

எனக்குறிப்பிடுவார். இதனை உணர்ந்திருந்த பட்டுக்கோட்டை

சிக்கல் நிறைந்த வர்க்கங்களைத் திருத்த
மக்கள் கலைதான் மலர்ந்திட வேண்டும் (158)

என்ற கொள்கையுடையவராய் எழுதியுள்ளார்.

பட்டுக்கோட்டையில் காணும் மிகச்சிறந்த கூறுகளாக நாட்டுப்புறத்தன்மை (Folk Traditions), நவீன வெளிப்படுத்தம் (Modern Expression) ஆகியவற்றை ஜீவானந்தம் குறிப்பிடுவோர்.[5] நவீன கண்டுபிடிப்பான வர்க்கப்பார்வையும் நாட்டுப்புறப்பாடல்களில்

உழைக்கும் உடல் அசைவுகளுக்கேற்ப அமைந்த பேச்சு வழக்கும் ஓங்கி நின்று இனிமை பயப்பதை, பட்டுக்கோட்டையின் பாடல்களில் காணலாம்.

பிற்பகுதியில் காட்டப்பெறும் உதாரணப் பாடல்களிலேயும் இத்தன்மையைக் காணலாம்.

யாதும் ஊரே யாவரும் கேளிர் (புறம்.192)

என்ற கணியன் பூங்குன்றனார் கூற்றும்

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை (குறள்.322)

என்ற வள்ளுவர் கூற்றும்

பறைச்சிஆவ தேதடா பனத்தியாவ தேதடா
இறைச்சிதோ லெலும்பிலும் இலக்கமிட்டி ருக்குதோ (சிவ வாக்கியம்)

என்ற சிவவாக்கியச் சித்தர் கூற்றும் சுரண்டப்பட்டோர் நலனுக்காகச் சுரண்டுவோரின் காதுகளில், காய்ச்சிய ஈயமாகப் பாய்ந்திருக்கக் கூடும், பாயவும் கூடும்.

இந்த மரபிலே பாரதி, பாரதிதாசன் வழியிலே பட்டுக்கோட்டை முன்னே நிற்கிறார்.
மக்கள் படும் துயருக்கு,

நாடு செழிக்க உழைக்கும் எளியவர்
நாதியின்றி உள்ளம் நைந்திடக் கண்டேன்
நன்றியில்லாத முதலாளி ஆட்சியின்
நயவஞ்சகத்தால் வந்த நலிவென்று ணர்ந்தேன் (46)

எனக் காரணத்தைக் கண்டு கொண்ட பட்டுக்கோட்டை,

கூழுக்குப் பலபேர் வாடவும்
சிற்சிலர் கொள்ளையடித்தலைச் சகியோம்(65)

என்று இந்தக் கொடுமைக்கெதிரான குரல் கொடுத்தும்

மனிதரை மனிதர்
சரி நிகர் சமமாய்
மதிப்பது நம் கடமை (50)

என்று சபதமேற்றும். இந்த நோக்கத்துக்குத் தடையாக இருக்கும் எதையும் தன் பேனா முனையால் தகர்க்கிறார்.

தட்டுகெட்ட மனிதர் கண்ணில்
பட்டதெல்லாம் சொந்தம்
சட்டப்படி பார்க்கப் போனால்
எட்டடிதான் சொந்தம் (128)

எனப் பட்டுக்கோட்டை சுட்டும் சுருட்டல்பேர்வழிகள். தாங்கள் கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்றும் தங்களால் ஒடுக்கப் பட்டோர் அந்நிலையிலிருப்பதற்குக் காரணம் கடவுளுக்கு எதிராக அவர்கள் செய்த பாவமே என்றும் அல்லது அவர்கள் பெற்றோர் செய்த பாவமென்றும் விதியென்றும் சொல்லி, தங்களது கொள்ளைத்தனத்தை மூடிமறைக்கும் செயலை,

நலிந்த எளியோரை வலியவர்பார்த்து
போன ஜென்மத்தின் வினையென்றும்
விதி யென்றும் சொல்லி வச்சாங்க(89)

எனச் சாடுகிறார். இந்திய மண்ணிலே 2500 ஆண்டுகளுக்கு முன்பே புத்தர், தன் கண்ணில் பட்டதெல்லாம் தனக்குச் சொந்தம் என்று சுரண்டுவோர் நினைக்கும் ஆசையே ஒடுக்கப்பட்ட பலரது துன்பத்துக்கும் காரணம் என்றார். விதியோ பிறவியோ காரணம் இல்லை என்பதுதான் இதன் பொருள்.இதே பொருளில், இவன் செய்த பாவமுமல்ல இவன் பெற்றோர் செய்த பாவமுமல்ல என்று இயேசு இவர்களின் ஏமாற்று வேலைக்கு வேட்டு வைத்துள்ளார்.

வரலாற்றுக்காலம்முதல் ஏமாற்று வர்க்கத்தின் நலனுக்காக எழுதப்பட்டவற்றையே பெரும்பாலும் உன்னதமானவை என்று எல்லாருக்கும் பொதுவாகச் சொல்லிக் கொடுப்பவர்களைப் பார்த்து,

வாழை நிலைக்குது சோலை தழைக்குது
ஏழைகளுக்கதில் என்ன கிடைக்குது ? (71)

என்ற கேள்வியை எழுப்பி விட்டு

நாடு செழிச்சிட மாடா ஒழைச்சவன்
நாத்து பறிச்சவன் ஏத்தம் எறைச்சவன்
மூடாத மேனியும் ஓடா எளச்சவன்
போடாத விதைகளும் போட்டு வளர்த்தவன்
அரை வயித்து கஞ்சி குடிக்கிறான் – சில நாள்
அதுவுங் கிடைக்காமத் துடிக்கிறான் (72)

என்கிறார். இப்படி மாடா ஒழைச்சவன் வண்டியோட்டிச் செல்லும் போது பாடும் பாட்டில் மாடுகளைப் பார்த்து,

மாடுகளே உங்கபாடு தேவலே
வைக்கோல் வந்திடும் வீட்டுக்கு (68)

எனத் தனது அவலத்தை வெளிப்படுத்தும் வகையில் பாடியுள்ளார். இப்படியாக உழைப்பவர்களைத் துடிக்க வைத்து விட்டு, அவர்கள் கோபப்பட்டால் தனக்கு ஆபத்து என்பதையுணர்ந்து அன்பாய் நடந்து கொள்ள வேண்டுமென்றும் துடிப்பவர்களிடத்தே புத்திசாலித் தனமாய்ப் போதித்து அறிவையும் மழுங்கடிக்கிறது ஏமாற்று வர்க்கம். அவர்களின் இயல்பான பண்பையும் அழிக்கிறது. இதனை,

அன்பிருக்குது அறிவிருக்குது
பண்பிருக்குது பாரிலே– அதை
அழிக்க எண்ணித் திருட்டு நரிகள்
குழிபறிக்குது வேரிலே (33)

என்கிறார் பட்டுக்கோட்டை.

முதலாளித்துவத்தின் இன்னொரு நிலை கல்வியிலே சமச்சீரற்ற போக்கு. உழைப்பவரின் குழந்தைகள் மருத்துவர்களாகவும் விஞ்ஞானிகளாகவும் உருவாகும் அளவுக்கு அறிவிருந்தும் பணமில்லாத காரணத்தால் படிக்க முடியாமல் அல்லலுறும் நிலை. மறுபக்கம் படிக்கவே வராத பணக்காரப் பிள்ளைகளுக்குப் படிப்பு என்ற பேரிலே பல இலட்சம் வீணான செலவு. (பணம் என்பது மனித உழைப்புக்கான மதிப்பீடு என்கிறார்கள் பொருளியலாளர்கள். பல இலட்சம் என்பது பலரது உழைப்பின் சுருட்டல் அல்லவா?) இதனை,

பள்ளி செல்லும் மாணவர்க்குப்
படிப்பு வந்தால் பணமில்லை
பணமிருந்தால் இளைஞருக்குப்
படிப்பதிலே மனமில்லை,
மனமிருந்து படிப்பும் வந்து
பரீட்சையிலும் தேறிவிட்டால்
பலபடிகள் ஏறி இறங்கிப்
பார்த்தாலும் வேலையில்லை (134)

*எனக் கூறுகிறார். வேலையில்லாத் திண்டாட்டம் என்பது முதலாளி யத்தின் இன்னொரு கொடுமை. தப்பித், தவறி வேலை கிடைத்து விட்டால் உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடைக்காத நிலையையும் அதனால் உழைத்தவரின், வாழ்நிலையையும் வருமாறு விளக்குகிறார்.*

கையிலே வாங்கினேன் பையிலே போடல்லே
காசு போன இடம் தெரியல்லே—என்
காதலி பாப்பா காரணம் கேப்பா
ஏது சொல்வதென்றும் புரியல்லே
ஏழைக்குக் காலம் சரியில்லே

மாசம் முப்பது நாளும் ஒளைச்சு
வறுமை பிடிச்சு உருவம் இளைச்சு
காசை வாங்கினாக் கடன்கார னெல்லாம்
கணக்கு நோட்டோட நிக்குறான்—வந்து
எனக்கு உனக்குன்னு பிய்க்கிறான்

சொட்டுச் சொட்டா வியர்வை விட்டா
பட்டினியால் பாடுபட்டா
கட்டுக்கட்டா நோட்டு சேருது
கெட்டிக்காரன் பொட்டியிலே—அது
குட்டியும் போடுது வட்டியிலே(376)

*இப்படியாகப் பொட்டியிலே சேர்ந்த மக்களது உழைப்பானது பணம் என்ற வடிவிலே செய்யும் கொடுமையை,*

எளிய மக்கள் தலையில்காசு
ஏறி மிதிக்குது —அதை
எண்ணித் எண்ணித் தொழிலாளர்
நெஞ்சு கொதிக்குது (95)

*என்கிறார்.*

இன்றைய மூத்தோர்கள் மனத்திலே இளமை முதலே முதலாளித்துவ சிந்தனையை ஏற்றுக்கொள்ளும் மன நிலை வளர்க்கப்பட்டு ஆழமாகப் பதிந்து விட்டதை உணர்ந்த பட்டுக்கோட்டை, இளைஞர் பக்கம் தனது கவனத்தைச் செலுத்துகிறார்.

அப்பா அம்மா சொன்னதைக் கேளு
அறிவு வந்ததும் சிந்திச்சிப்பாரு
அலட்சியமா இருந்திடாதே சின்னத்தம்பி
அதிக வேலை காத்திருக்குது உன்னை நம்பி– நாட்டில்
அதிக வேலை காத்திருக்குது உன்னை நம்பி (220)

என்றும், சிந்திக்கும் ஆற்றல் அற்றுப் போன இளைஞர்களைப் பார்த்து

ஆளும் வளரணும் அறிவும் வளரணும்
அதுதாண்டா வளர்ச்சி

என்று அறிவுரை செய்து விட்டு,

தனியுடைமைக் கொடுமைகள் தீரத்
தொண்டு செய்யடா–நீ
தொண்டு செய்யடா!

தானா எல்லாம் மாறும் என்பது
பழைய பொய்யடா–எல்லாம்
பழைய பொய்யடா

வேப்பமர உச்சியில் நின்னு
பேயொன்னு ஆடுதுன்னு
விளையாடப் போகும்போது
சொல்லி வைப்பாங்க–உன்
வீரத்தைக் கொழுந்திலேயே
கிள்ளி வைப்பாங்க
வேலையற்ற வீணர்களின்
மூளையற்ற வார்த்தைகளை
வேடிக்கையாகக் கூட
நம்பி விடாதே (283)

என்று வேண்டுதல் விடுக்கிறார்! இந்த ஏமாற்று உலகத்தைப் பற்றித் தெளிவாக இளைஞருக்குச் சுட்டுகிறார்.

குறுக்கு வழியில் வாழ்வு தேடிடும்
குருட்டு உலகமடா—இது
கொள்ளையடிப்பதில் வல்லமை காட்டும்
திருட்டு உலகமடா—தம்பி

தெரிந்து நடந்து கொள்ளடா—இதயம்
திருந்த மருந்து சொல்லடா

இருக்கும் அறிவை மடமை மூடிய
இருட்டு உலகமடா— வாழ்வின்
எந்த நேரமும் சண்டை ஓயாத
முரட்டு உலகமடா—தம்பி

தெரிந்து நடந்து கொள்ளடா— இதயம்
திருந்த மருந்து சொல்லடா (132)

என முதலாளித்துவத்தைப் பற்றிக் கூறிவிட்டு, அதிலே பழக்கப்பட்டுப் போய்விட்ட இதயம் திருந்துவதற்கான மருந்தை இளைஞரிடம் தேடிச் செல்லுகிறார். ஆதிக்க வர்க்கம் எந்த நேரமும் போரிலே நாட்டம் செலுத்துவதை இதில் பதிவு செய்துள்ளார்.

மனிதனாக வாழ்ந்திட வேண்டும்
மனதில் வையடா—தம்பி
மனதில் வையடா (277)

என்று கூறி விட்டு, அப்படி வாழ்தல் என்பது எப்படி என்பதை உழைக்கும் மக்களின் ஒரு பகுதியினர் வழி விளக்குகிறார்.

ஏமாத்த மாட்டோம்— நாங்க
ஏமாறவும் மாட்டோம்
என்ன நடந்தாலும் ஊர
ஏச்சிப் பொழைக்க மாட்டோம்—நாங்க
இதயமுள்ள கூட்டம்

சொன்ன சொல்லு மாற மாட்டோம்
சூழ்ச்சி பண்ண மாட்டோம்—நாங்க
சொரண்டிச் சேர்க்க மாட்டோம்

சில சோம்பேறிப் பசங்க போலே
சும்மா வாங்க மாட்டோம்—காசைச்
சும்மா வாங்க மாட்டோம் (107)

இங்கே இலஞ்சம் என்பதும் இந்த ஏமாற்றுச் சமூகத்தின் இன்னொரு கூறு. பட்டுக்கோட்டை இதனையும் விடவில்லை.

முதலாளித்துவத்தின் இன்னொரு சீர்கேடு பெண்ணடிமைத் தனமாகும். முதலாளியம் பேசுகின்ற பெண்ணியம் கூட உழைக்கும் பெண்களின் நன்மைக்கானவையல்ல. பட்டுக்கோட்டையில் ஒரு சில இடங்களில் ஆணாதிக்கச் சிந்தனை மெல்லிய குரலில் ஒலித் திருந்தாலும் அதற்கெதிரான அவரது குரல் வன்மையாகவே ஒலித்திருக்கிறது.

தாலி என்று போட வந்தால் இரு பாலரும் போட்டுக்கணும் என்றும் உலகம் புதுசா மாறும் போது பழைய மொறைய மாத்திக்கணும் என்றும் கூறும் பட்டுக்கோட்டை,

கழுத்திலே தாலி கிடந்தா
காலி கூட மதிப்பான்— கொஞ்சம்
கன்னியமா நடப்பான்—இந்தக்
கயிறு மட்டும் இல்லையின்னா
கழுதை போல இடிப்பான் (255)

என்று ஒரு பட்சமாகப் பேசும் பழமைவாதிகளுக்கு

ஆம்புளைக்கும் தாலி கிடந்தா
அடுத்த பொண்ணு மதிப்பா—கொஞ்சம்
அடங்கி ஒடுங்கி நடப்பா—இந்த
அடையாளம் இல்லையின்னா
அசட்டுத்தனமா மொறைப்பா (255)

எனப் புத்தி சொல்வதைக் காணமுடிகிறது. எந்த அடிமைத்தனத்துக்கும் எதிரானவராகையால் பெண்ணடிமைத்தனத்தையும் எதிர்க்கிறார்.

ஆணுக்குப் பெண்கள் அடிமைகள் என்று
யாரோ எழுதி வைச்சாங்க— அன்று
யாரோ எழுதி வைச்சாங்க—அதை
அமுக்கிப் பிடிச்சிக்கிட்டு விடமாட்டேன்னு
ஆண்கள் ஒசந்துகிட்டாங்க—பெண்கள்

ஆமைபோல ஒடுங்கிப் போனாங்க

மனைவி இறந்தபின் வயதான தாத்தாவும்
மறுமணம் பண்ணிக்கிட உரிமையுண்டு—இளம்
மங்கையை முடிப்பதுண்டு, மண்டை வரண்டு—தன்

கணவனை இழந்தவள் கட்டழகியானாலும்
கடைசியில் சாக மட்டும் உரிமையுண்டு—இதில்
கதைகளும் கட்டிவிடும் ஊர்திரண்டு (149)

*பாட்டாளிகள் சுரண்டும் வர்க்கத்துக்காய் உழைத்த நிலையை விளக்குவதற்கு,*

தாலி கட்டிக் கொண்ட மனைவி
போலுழைத்த எங்களைத்
தவிக்கவிட்டபேரை—எந்த
நாளும் மறக்க மாட்டோம் (95)

*என இச்சமூகத்தில் அடிமைகளின் அடிமைகளான தாலிகட்டிக் கொண்டதால் துயர்படும் பெண்களை உதாரணமாக்குவதன் மூலம் பெண்களின் இழி நிலையயைப் பதிவு செய்துள்ளார்.*

*முதலாளித்துவப் பாறைகளை உடைக்க ஒருவன் ஆண்களை அழைக்கையிலே, பெண்ணொருத்தி தனது தோழியர் பலரை விளித்து,*

காரியத்தில் இறங்கும் போது
பேதமில்லே (85)

*எனக் கூறுவதாகப் பாடுகிறார். வர்க்கப் போராட்டத்தில் ஆண் பெண் பேதமில்லை; எல்லாரும் சேர்ந்துதான் அதனை முன்னெடுக்க வேண்டுமென்பதை இவ்வாறு தெளிவுபடுத்துகிறார் பட்டுக்கோட்டை. மேற்கண்ட பாடலில் தொடரும் அடிகளும் காதல் என்பது இன்ப கரமான தன்மை கொண்டது என்ற சுகவாசிகளின் கூற்றை மறுதலிக்கின்றன.*

காடு வெளைஞ்சென்ன மச்சான்—நமக்குக்
கையும் காலுந்தானே மிச்சம் (72)

*என்கிற பாடலெல்லாம் உயர்ந்த காதல் பாடல்தானே! காதலில்லாத வாலிபமும் இருக்க முடியும். ஆனால் உணவில்லாமல் குழந்தை முதல் பெரியவர் வரை யாருமே இருக்க முடியாது. உணவில்லையானால் காதல் கூட பிரச்சனைதான். எனவே, மூலாதாரமான வயிற்றுப்*

பிரச்சினையை முன்னிலைப்படுத்துவது தன்னைப் போல் பிறரை நேசிக்கத் தெரிந்த யாருக்கும் தெரியும். பட்டுக்கோட்டைக்கு இது தெரிந்ததில் வியப்பில்லை. இதனை மக்களுக்குப் புரிய விடாமல் நமது கவிஞர்கள் காதலையே எழுதிக் கொண்டிருப்பதுதான் வியப்பு.

சமயம் குறித்த அளவில் பட்டுக்கோட்டையின் நிலை என்ன என்பதை அறிதல் இன்னும் கூடுதலாக அவரைப் புரிந்து கொள்ள உதவலாம்.

வெறும் பகுத்தறிவுவாத நாத்திகத்தின் கண்ணோட்டத்தில் அல்லாது, மார்க்சிய கண்ணோட்டத்தில் சமய இயக்கங்களை ஆராய வேண்டும் எனக் கூறும் நேத்ரா,

> ஆளும் வர்க்கங்கள் சமுதாய மாற்ற இயக்கங்களில் மக்கள் ஈடுபடுவதைத் தடுக்கவும் அவர்களுடைய சிந்தனையை மழுங்கடித்து ஆளும் வர்க்கங்களின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளச் செய்யவும் சமய நிறுவனங்களைப் பயன்படுத்தி வந்திருக்கின்றன;வருகின்றன என்பது உண்மையே. இது சமுதாயத்தின் ஓரம்சமாகும். அதே சமயத்தில் சமயத்தின் மற்றோர் அம்சமாக ஆதிக்கவர்க்கங்கள் போற்றும் சமய நிறுவனங்களுக்கும் சமய சித்தாந்தங்களுக்கும் எதிராகவும் உள்ள சமய இயக்கங்கள் ஒடுக்கப்பட்ட மக்களிடையே தோன்றி வளர்ந்திருக்கின்றன[6].

என்கிறார். பட்டுக்கோட்டை இக்கருத்தினைத் தெளிவாக உணர்ந்திருக்கிறார். இந்த அடிப்படையிலேயே சமயத்தை இவர் பொதுவாக எதிர்த்தெழுதியதாகத் தெரியவில்லை; ஆனால் பகுத்தறிவுவாத நாத்திகத்தை மட்டும் பேசி மக்கள் வாழ்க்கையை மறந்த தமிழகத்து நிலையைப்,

> **கடவுள் இருப்பதும் இல்லை யென்பதும்**
> **கதைக்குதவாத வெறும் பேச்சு**
> **கஞ்சிக்கில்லாதவர் கவலை நீங்கவே**
> **கருத வேண்டியதை மறந்தாச்சு. பழங்**
> **கதைகளைப் பேசிக் காலம் வீணாச்சு (126)**

என்றும்

மேலே ஆண்டவன் இருக்கான்
கீழே நம்மை ஆண்டவன் இருக்கான்
இருக்கிறவன் இருக்கான்
போறவன் போறான்
ஏழைங்க முகத்தெ எவன் பாக்கறான் (349)

என்றும் குறிப்பிடுகிறார்.

நேத்ரா மேலே குறிப்பிட்டது போல ஆதிக்கவர்க்கங்கள் போற்றும் சமய நிறுவனங்களுக்கும் சமய சித்தாந்தங்களுக்கும் எதிராக உள்ள, ஒடுக்கப்பட்ட மக்களிடையே தோன்றி வளர்ந்துள்ள அங்காளம்மாளை,

அங்காளம்மாள் கோவிலுக்குப்
பொங்க வைக்க வேணும்
அன்னையவள் எங்களையும்
பொங்க வைக்க வேணும் (362)

என உழைப்பாளர் சார்பில் வேண்டிக்கொள்ளும் பட்டுக்கோட்டை அதே பாடலில் அங்காளம்மாளிடம்,

எல்லோருக்கும் உலகம் ஒண்ணு
இருளும் ஒண்ணு ஒளியும் ஒண்ணு
இன்னும் சொன்னா நீயும் ஒண்ணு
நானும் ஒண்ணு தானே
யாரு மேலே கீறினாலும் ரத்தம் ஒண்ணுதானே
ஆகமொத்தம் பிறந்ததெல்லாம்
பத்தாம் மாதம் தானே (362)

என நியாயத்தை வைத்து, வர்க்க பேதமற்ற சமூக உருவாக்கத்திற்கான தத்துவத்தைப் பேசுகிறார்.

சித்தர்களும் யோகிகளும்
சிந்தனையில் ஞானிகளும்
புத்தரோடு இயேசுவும்
உத்தமர் காந்தியும்
எத்தனையோ உண்மைகளை
எழுதி எழுதி வச்சாங்க
எல்லாந்தான் படிச்சீங்க
என்ன பண்ணி கிழிச்சீங்க (57)

என்ற கேள்வியை, ஆதிக்க வர்க்கத்தைப் போற்றுவோரைப் பார்த்துக் கேட்டுவிட்டு,

மனசிலே பட்டதை வெளியிலே சொல்றேன்
வந்தது வரட்டும் போடா
உள்ளதைச் சொன்னா ஒதைதான் கெடைக்கும்
ஒலகம் இதுதாண்டா— ராஜா
ஒலகம் இதுதாண்டா
உள்ளத் துணிவோடு பொய் சொல்லுவோர்க்கு
உல்லாச புரிதாண்டா—இது
உல்லாச புரிதாண்டா (59)

என வர்க்கச் சமுதாயத்தின் கேடு கெட்ட நிலையைத் துணிவோடு சொல்லும் பட்டுக்கோட்டை காலந்தெரிந்து கூவும் சேவல் குறித்துப் பின்வருமாறு பாடியுள்ளார்.

காலம் தெரிந்து கூவும் சேவலைக்
கவிழ்த்துப் போட்டாலும் நிறுத்தாது
கல்லைத் தூக்கிப் பாரம் வைத்தாலும்
கணக்காய்க் கூவும் தவறாது (90)

இது முழுக்க முழுக்க பட்டுக் கோட்டைக்கே பொருந்தும் திரைப்படத் துறையிலே அவர் காலம் தெரிந்து கூவிய கவிஞர்.

## அடிக்குறிப்புகள்

1)கைலாசபதி,க., சமூகவியலும் இலக்கியமும், சென்னை 1979, ப.121.

2)பாலகிருஷ்ணன்,பி.இ. (தொகுப்பு), மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள், சென்னை 1988 (ஒன்பதாம் அச்சு), பாடலுக்குப் பின் தரப்பட்டுள்ள எண் மேற்கண்ட நூலில் பாடல் இடம் பெற்றுள்ள பக்கத்தைக் குறிக்கும். இக்கட்டுரை முழுக்க பாடலுக்குப் பின் எண் மட்டும் கொடுக்கப்பட்டிருந்தால் இப்புத்தகத்ததின் பக்கத்தையே குறிக்கும்.

3)ஜீவானந்தம்,ப., இணைப்புக்கட்டுரை, மக்கள்கவிஞர் பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள், சென்னை 1984, ப.13.

4)மா.சே.துங்.,கலையும் இலக்கியமும் (மொழிபெயர்ப்பு), சென்னை 1988 ப.31.

5)ஜீவானந்தம்.ப., இணைப்புக்கட்டுரை. மக்கள்கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள். சென்னை 1984. ப.15.

6)நேத்ரா. முன்னுரை. ஜார்ஜ்தாம்சன். சமயம் பற்றி. சென்னை 1988 ப.vi.

# இலக்கியக் கருத்தாடல்

*ந. இளங்கோ*

நாம் நம் உணர்வுகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதற்காகவும், பெற்ற கருத்துகளை வெளிப்படுத்துவதற்காகவும், வாழும் சூழல், சமுதாயம் பற்றிய கருத்துகளைப் பெறுவதற்காகவும், சமூக உறவுகளை வளர்த்தெடுப்பதற்காகவும் பிற மனிதர்களுடன் கருத்தாடலில் (Discourse) ஈடுபடுகிறோம்.

கருத்தாடல் என்பது ஒரு செயல்போக்கு (Process) பேசுகிறவர் – கேட்பவர், எழுதுபவர் – படிப்பவர் எவராயிருந்தாலும் அவர்களுக்கிடையே நடைபெற்றிருக்கக்கூடிய ஊடாட்டத்திற்குப் (Interaction) பெயர்தான் கருத்தாடல். ஊடாட்டத்தின் விளைவாக ஒரு கருத்து உருவாக்கப்படுகிறது. இந்தக் கருத்து உருவாக்கத்திற்கான ஊடாட்டத்தின் வாயிலாகச் சில கருத்துகள் பரிமாற்றம் (Transaction) செய்யப்படுகின்றன. இந்த ஊடாட்டம், கருத்துப் பரிமாற்றம் இரண்டும் இணைந்ததுதான் கருத்தாடல் என்ற செயல்போக்கு. இச்செயல் போக்குக்காக முகபாவங்கள், கைகால் அசைவுகள், படம் போன்ற மொழி அல்லாத கைகால் அசைவுகள், படம் போன்ற மொழி அல்லாத மொழிசாராக் கூறுகளையும் (Non - Verbal means), மொழிசார்க் கூறுகளையும் (Verbal Means) பயன்படுத்திக் கருத்து உருவாக்கம் (Meaning Negotiation) என்ற செயல்பாட்டை நிகழ்த்துவதுதான் கருத்தாடல்.

இலக்கியக் கருத்தாடல் என்பது படைப்பாளி செய்தியை நேரடியாகச் சொல்லாமல், எதைச் சொல்கிறான், எவ்வாறு சொல்கிறான் என்பதிலேயே அமைகிறது. ஒரு கருத்தை நேரடியாகச் சொல்லாமல் மறைமுகமாக, சொல்லுகின்ற முறையிலேயே, மொழியைப் பயன்படுத்துகின்ற முறையிலேயே படைப்பாளி சொல்ல கேட்பவனோ படிப்பவனோ புரிந்துகொள்ள முடிவதுதான் இலக்கியக் கருத்தாடலின் வெற்றி.

படைப்பு என்பது ஒன்றுமே தெரியாமல் படைப்பது அன்று. தெரிந்ததை முறையாகப் புதிய முறையில் படைப்பதுதான் படைப்பு. ஒரு மொழியமைப்புத் தெரியாமல், இலக்கியப் பண்பு தெரியாமல் ஒரு நாவலோ, சிறுகதையோ எழுத முடியாது. இலக்கியப் பண்புகள் தெரிந்த இருவர் இலக்கியம் படைக்கும்போதுகூடச் சிறப்புத் தன்மைகள் மாறுபடும் அதில்தான் படைப்பின் சிறப்பு இருக்கிறது எனவே இலக்கியப் படைப்பை உருவாக்குவதற்கோ திறனாய்வு செய்வதற்கோ சில விதிமுறைகளை உருவாக்கிக் கொடுத்தால் இலக்கியப் படைப்பை உருவாக்குவதற்கோ இலக்கியத் திறனாய்வு செய்வதற்கோ அவை பயன்படக்கூடும். அந்த அடிப்படையில்தான் இலக்கியக் கருத்தாடல் மொழியியல் நோக்கில் அணுகப்படுகிறது.

## பண்பாட்டுச் சூழலும் இலக்கியமும்

பண்பாடு மொழியியலாளர்களால் முதல் நிலைப் பண்பாடு (Primary Culture) இரண்டாம் நிலை பண்பாடு (Secondary Culture) என வகைப்படுத்தப்படுகிறது. நாம் பிறந்து வளர்கிற சமுதாயத்திலே சில மரபுகள் பின்பற்றப்படுகின்றன.ஒரு திருமண இல்லத்திற்குப் போய் வரும்போது திருமணவீட்டாரிடம் சொல்லி விட்டு வரவேண்டும்; இறப்பு வீட்டிற்கு போய்வரும் போது சொல்லாமலே வந்து விட வேண்டும் என்பன இத்தகைய மரபுகளுக்குச் சான்றாகும். இஃது இயல்பாக தமிழ் நாட்டுப் பண்பின் அடிப்படையில் வருவது. இதுவே முதல் நிலை பண்பாடாகும். இரண்டாம் நிலை பண்பாடு என்பது செயற்கையாகக் கற்றுக் கொடுக்கப்பட்டு வருவது. உலகெங்கிலும் உள்ள கிரிக்கெட் வீரர்கள் நடுவர் தம் கையின் ஆள் காட்டி விரலை உயர்த்திக் காட்டியதும் தாம் ஆட்டம் இழந்து விட்டதை உணர்ந்து மைதானத்தை விட்டு வெளியேறி விடுவர். இஃது உலகம் முழுமைக்கும் ஒரே மாதிரியாக இருக்கும். ஆனால் முதல் நிலை பண்பாடு நாட்டுக்கு நாடு வேறுபடும். இலக்கியத்திலும் இப்பண்பாட்டின் தாக்கம் இருக்கும் சான்றாக ஒரு திரைப்படப் பாடலைக் கூறலாம்.

தெய்வத்தின் மார்பில் சூடியமாலை தெருவினிலே விழலாமா ?
தெருவினிலே விழுந்தாலும் வேறோர் கைதொடலாமா ?
ஒரு கொடியில் ஒரு முறைதான் மலரும் மலரல்லவா ?
ஒரு மனதில் ஒரு முறைதான் வளரும் உறவல்லவா ?

என்ற கண்ணதாசனின் இந்தப்பாடல் மரணத்தை நோக்கியிருக்கும் கணவனுக்கும், தான் இறந்து விட்டால் மறுமணம் செய்து கொள்ள அறிவுறுத்தப்படும் அவனது மனைவிக்குமான மனப் போராட்டத்தின் விளைவாக எழுவது. ஒருவனுக்கு ஒருத்தி என்னும் கொள்கையை அழுத்தமாகக் கொண்டிருக்கும் தமிழகப் பின்புலத்தில் இப்பாடல் இலக்கியத் தகுதிபெறும். ஆனால் விவாகரத்தையும், மறுமணத்தையும் மிக எளிதான ஒன்றாகக் கொண்டிருக்கும் மேலை நாட்டில் இவ்வடிகளுக்கு இலக்கிய மதிப்பு இருக்காது. எனவே இலக்கியத்தில் முதல் நிலைப்பண்பாடு மிக இன்றியமையா இடத்தைப் பெறுகிறது.

'எள்ளல்' என்பது கவிதையில் இடம் பெறும் இன்றியமையாத புலப்பாட்டு உத்தியாகும். நம் மரபு வழிப்பட்ட சிந்தனைகள் ஏற்புடையதல்லாதனவாக இருந்தாலும் 'எள்ளல்' செய்வதுண்டு; அல்லது மாண்புடைதாக இருந்த நம் மரபுகள் சிதைந்து கிடக்கும் போதும் அதனைச் சுட்டிக்காட்டுவதற்காக எள்ளல் செய்வதுண்டு. இதற்கு அச்சிந்தனைகளை வெளிப்படுத்திய வடிவங்களையோ முரணான செய்திகளையோ பயன்படுத்திக் கருத்துகளைப் புலப் படுத்துவதுண்டு.

கெடுக சிந்தை கடிதிவன் துணிவே
அரசியல் அறிஞன் ஆதல் தகுமே
மேனாள் வாங்கிய பரிசுச் சீட்டால்
வீணானதுவே நானூறு பணமும்!
வாராது வந்த சாராயம் பெறத்
தட்டுமுட்டுப் பொருள் விற்றீந்தனனே!
நேற்றாடிய ஒரு சீட்டாட்டத்தில்
தோற்றான் ஆயிரம் துவண்டான் இலையே!
இன்றும் நாயோடு கண்டு மகிழ்ந்து
மனைவியின் மங்கல அணிமுதல் தனது
மணிப் பொறியினையும் உணவினை மறந்தே
அடகுக் கடையில் கிடவெனக் கிடத்தி
ஒடும் குதிரைமேல் ஒடுஎன் விடுமே.

என்னும் இக்கவிதையின் கருத்து இன்றைய வாழ்வை ஒட்டியது. பரிசுச்சீட்டு, சாராயம், சூது, குதிரைப்பந்தயம் ஆகியவற்றினால் தன் செல்வத்தை இழக்கும் தற்கால மனிதனைக் கவிஞர் 'ஆதல் தகுமே' எனக் கேலி செய்கிறார். இக்கவிதையில் வெளிப்படும் சங்கப்பாடல் வடிவமே கவிஞனின் எள்ளல் கருத்தை

உணர்த்துகிறது. இது போன்றே மீராவின் 'நவயுகக் காதல்' கவிதையும் எள்ளல் பொருளைத் தருகிறது.

உனக்கும் எனக்கும்
ஒரே ஊர்
வாசுதேவ நல்லூர்
நீயும் நானும்
ஒரே மதம்...

திருநெல்வேலிச்
சைவப் பிள்ளைமார்
வகுப்புச் கூட
உன்றன் தந்தையும்
என்றன் தந்தையும்
சொந்தக்காரர்கள்
மைத்துனன்மார்கள்
எனவே
*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்*
*கலந்தனவே!*

முதல் கவிதையில் வடிவமும் இரண்டாம் கவிதையில் சங்கப் பாடல் அடிகளும் கவிதை உணர்த்தவரும் செய்தியைப் புலப்படுத்துகின்றன.

## விலகல்கள்

ஒரு படைப்பாளிக்கும் வாசகனுக்கும் அவர்கள் பயன்படுத்தும் மொழியமைப்பு நன்கு தெரியும். எனவே அந்த மொழியமைப்பை அப்படியே பயன்படுத்திக் கருத்தைச் சொன்னால் அது இலக்கியக் கருத்தாடல் இல்லை. இருக்கின்ற மொழிக் கூறுகளைப் பயன்படுத்தி இன்னொன்றை உருவாக்குகிறான் கவிஞன். ஒரு படைப்பாளி சொல் விலகல், பொருள் விலகல், தொடர் விலகல் என்று பல விலகல்களைப் (Deviants) பயன்படுத்தி இலக்கியக் கருத்தாடலை மேற்கொள்ள முயல்கிறான். ஆய்ந்து பார்த்தால் அந்த விலகல்களே அந்த படைப்பாளி வெளிப்படுத்த நினைக்கின்ற கருத்தின் ஒரு பகுதியாக அமைந்து விடுகின்றன. சொல்ல நினைக்கும் செய்தியை நேரடியாகச் சொல்லாமல், மொழி விலகல்களின் மூலம் வெளிப்படுத்துகிறான். ஏன் அவ்வாறு சொல்கிறான் என்பது புரியும் போது தான் எதைச்

சொல்கிறான் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். அந்த விலகல்களின் மூலம்தான் இலக்கியத்தை அதிகமாகப் புரிந்து கொள்ள முடியும்.

**ஒலியன் விலகல்**

ஓர் ஒலியனில் ஏற்படும் மாற்றமும் கவிதைத் தன்மையைத் தரும்.

பழைய வார்ப்புப்
பல்கொலைக் கழகங்கள்
தாயே! உன்னைப்
பாஞ்சாலியாக்கிப் பரவசப்படும்
துச்சாதனர்களால்
பெருமைப்பட்டுக் கொள்கின்றன

இக்கவிதையில், தற்போதைய கல்வியின் நிலை குறித்துப் பாடும் போது 'பல்கொலைக்கழகம்' என்று ஒலியனில் சிறு மாற்றம் செய்து ஒரு புதிய சொல் போலாக்கிக் கருத்தைச் சொல்வது படைப்புக்கு உயிரூட்டுவது, கருத்துக்குச் சிறப்புத் தருவது குறிப்பிடத் தக்கது. உள்ளபடியே பல்கொலைக்கழகங்கள் என்ற சொல் மூலம் அதன் நேரடிப் பொருளை உணர்வதோடு மட்டுமல்லாமல் பல்கலைக்கழகம் என்ற சொல்தான் இப்படிக் கவிஞரால் அவருடைய மதிப்பீட்டை (கல்விக் கழகமாக இல்லை என்ற இன்றைய நிலையை) உணர்ந்து கொள்ளும் வகையில் மாற்றப்பட்டிருக்கிறது. என்பதை வாசகன் புரிந்து கொள்வான். கவிதைகளில் தொடர் விலகல்களையும், பொருள் விலகல்களையும் திட்டமிட்டுப் பயன்படுத்தி கவித்துவத்தைத் தரும் கவிஞன் ஒலியன் விலகலையும் அங்ஙனம் பயன்படுத்து கின்றதையும் காணமுடிகிறது.

இவ்வுத்தியைத் தமிழன்பன் ஒரு கவிதைக் கருத்தாடல் உத்தியாகப் பயன்படுத்துகிறார் என்பதற்கு அவருடைய 'விமர்சினம்' என்னும் கவிதையும் சான்றாகும்.

அவன் என்ன எழுதிக் கிழித்துவிட்டான்
இவன் என்ன எழுதிக் கிழித்து விட்டான்
நான் விமர் 'சினம்' செய்ய......?

*இவ்விரண்டு கவிதைகளிலுமே 'எள்ளல்' கருத்துக்களைச் சொல்ல கவிஞர் இத்தகைய ஒலியன் விலகல்களைப் பயன் படுத்தியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.*

*ஒலியன் விலகல் மட்டுமன்றி ஒலியன்களில் செய்யப்படும் மாற்றங்களும் கவித்துவத்தைத் தருவதுண்டு. மீராவின் 'ஊசிகள்', தொகுப்பில் இடம் பெறும் 'தமிழ்ப்பற்று' கவிதை இதற்குச் சான்றாகும்.*

**தேவ பாஷையில்
தேர்ச்சி மிக்க
சாஸ்திரி ஒருவர்
சபையில் சொன்னார்
"ஜாதி வேண்டும்
ஜாதி வேண்டும்...."
உடனே சீறி
ஒரு தமிழ் மறவர்
ஓங்கி கத்தினார்:
" ஒய், ஒய், இனி நீர்
ஜாதி வேண்டும்**

**என்றால் பொறுமையாய்
இருக்க முடியாது என்னால்
சரியாய்ச்
சாதி வேண்டும்
என்றே சாற்றும்......**

*மு.மேத்தாவின் "தேசத்தைப் போலவே நம் வாழ்க்கையும் தெருவில் நிற்கிறது" என்னும் கவிதையில்*

**அரசியல் வாழ்க்கையில்
சில
கோமாளித் தலைவர்கள்
தேசத்தையே
குட்டி சுவராக்கி
அதில்
'வால் போஸ்டர்' ஒட்டுகிறார்கள்.....
குடும்ப வாழ்க்கையில்
சில
கோமாளிக் கிழத் தலைகள்
'வாய் போஸ்டர்'களாலேயே
குட்டிச் சுவர்
கட்டி விடுகிறார்கள்**

என்னும் பகுதியும் புதுக்கவிதைகளில் எள்ளல் உத்திகளுக்கு, அவலங்களை உணர்த்துவதற்கு ஒலியன்களில் மாற்றங்கள் திட்டமிட்டுச் செய்யப்படுகின்றன என்பதைக் காட்டுகிறது.

**சொல்விலகல்**

சொல்விலகல்கள் கவிதையில் அமைவதற்குப் பல்வேறு சான்றுகளைக் கூறலாம்.

செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே

என்ற பாரதியாரின் பாடலில் 'நாவினிலே' என்ற சொல்லுக்குப் பதிலாக வந்திருக்கும் 'காதினிலே' என்ற சொல்தான் கவிதைக்குப் பொருள் ஆழத்தைத் தருகிறது. 'நாவினிலே' என்றால் பேசுபவனை மட்டுமே குறிக்கும். 'காதினிலே' என்று கூறியதால் கேட்பவனையும் குறிக்கும். கேட்பவனுக்கும் இனிக்கும் என்றால் பேசுபவனக்கும் இனிக்கும் என்று பெறப்படும்.

'புரட்சிக் கவி' யில் வரும் பாரதிதாசன் பாடல் ஒன்றைச் சான்று காட்டலாம்.

அமுதவல்லி காத்திருந்த மேடை யண்டை
அழகியபூஞ் சோலையண்டை உதாரன் நின்றே,
இமையாது நோக்கினான் முழுநி லாவை!
இருவிழியால் தழுவினான்; மனத்தால் உண்டான்!
சுமைசுமையாய் உவப்பெடுக்க, உணர்வு வெள்ளம்
தூண்டிவிட ஆஆஆ என்றான்; வாணி
அமைத்திட்டாள் நற்கவிதை! மழைபோற் பெய்தான்!

என்ற கவிதையில் 'விழியால் தழுவினான்', 'மனத்தால் உண்டான்' என்ற தொடர்கள் வந்துள்ளன.விழியால் தழுவுவதோ மனத்தால் உண்பதோ சாத்தியமா! எனவே நடைமுறைக் கருத்தாடலில் இவை பொருளற்ற தொடர்கள். ஆனால் 'உணர்வு வெள்ளம் தூண்டிவிட' ஒருவன் எப்படியிருப்பான் என்பதைக் கவித்துவத்துடன் புலப்படுத்த இத்தொடர்விலகல்கள் கவிக்குத் தேவைப்படுகின்றன.

ஓர் அரசியல் கட்டுரையிலோ, இலக்கியக் கட்டுரையிலோ அறிவியல் கட்டுரையிலோ இடம் பெறும் 'நான்' எனும் சொல் எழுதுபவரைத்தான் குறிக்கும். ஆனால் ஒரு கவிதையிலோ,

சிறுகதையிலோ, நாவலிலோ இடம் பெறும் 'நான்' படைப்பாளியைத் தான் குறிக்கும் என்று சொல்ல முடியாது.

## பொருள் விலகல்

முரணுடன் பொருளைச் சொல்வது கவிதை உருவாக்குவதில் மிகச் சிறந்த உத்தியாகக் கொள்ளப்படுகிறது. இம்முரண் உத்தி கவிஞன் சொல்ல நினைக்கும் செய்தியைக் கவித்துவத்துடனும் தெளிவுடனும் சொல்ல உதவுகிறது.

இது குழந்தை பாடும் தாலாட்டு இது இரவு நேர பூபாளம்
இது மேற்கில் தோன்றும் உதயம் இது நதியில்லாத ஓடம்
நடை மறந்த கால்கள் தன்னில் தடயத்தைப் பார்க்கிறேன்
வடம் இழந்த தேரது ஒன்றை நாள்தோறும் இழுக்கிறேன்
சிறகிழந்த பறவை ஒன்றை வானத்தில் பார்க்கிறேன்
உறவில்லாத பெண்ணை எண்ணி நாளெல்லாம் வாழ்கிறேன்.

ஒரு தலைக் காதல் கொண்டு வாடி நிற்கும் ஓர் ஆண் தன் நிலையை விவரிக்கும் சூழலில் அமைந்தது இத்திரைப்பாடல். இப்பாடல் முழுக்க முழுக்க பொருள் விலகல்களைக் கொண்டே அமைந்துள்ளது. குழந்தைக்காகப் பாடப்படுவது தாலாட்டு. ஆனால் இங்கு குழந்தை தாலாட்டுப் பாடுவதாக உள்ளது. காலையில் இசைக்கப்படுவதே பூபாளராகம். இங்கே இரவு நேரத்தில் பூபாளராகம் இசைக்கப் படுவதாக உள்ளது. கதை மாந்தனின் செயல் எப்படிப்பட்டது என்பதை உணர்த்த முரண்பட்ட, நடைமுறையில் சாத்தியமற்ற ஒவ்வொன்றாகக் கூறி இறுதியில் கதைமாந்தனின் நிலையைக் கூறியுள்ளார் பாடலாசிரியர். இப்பாடலில் அமைந்திருக்கும் பொருள் விலகல்களே இப்பாடலுக்குச் சிறப்பைத் தருகின்றன.

முரண் என்னும் இக்கருத்தாடல் உத்தியைப் பயன் படுத்துவதிலும் கூட இரண்டு வகைகள் காணப்படுகின்றன. ராஜேந்தரின் பாடலில் கண்ட முரண்பட்ட நிகழ்வுகளைக் கூறி இறுதியில் அதற்கு இணையான முரண்முடிவை இறுதியில் அமைப்பது ஒன்று; மற்றொன்று முரண்களைத் தொடர்ந்து கூறி இறுதியில் அதற்கு நேரெதிர்மாறான விளைவை இறுதியில் கூறுவது. இதற்குத் தமிழன்பனின் பின்வரும் கவிதை தக்க சான்றாகும்.

வானம் கிடைத்த போது
சிறகை இழந்து விட்டேன்!
வார்த்தை கிடைத்த போது
கவிதை இழந்து விட்டேன்!

பாதை தெரிந்த போது
பயணம் இழந்து விட்டேன்!
படிப்பு கிடைத்த போது
பாடம் இழந்து விட்டேன்!

விதை கிடைத்த போது
நிலத்தை இழந்து விட்டேன்!
இசை துளிர்த்த போது
வீணை இழந்து விட்டேன்!

அலைகள் வந்த போது
நதி இழந்து விட்டேன்!
கிரணம் கிடைத்த போது
நிலவை இழந்து விட்டேன்!

அந்தி வந்த போது
இரவை இழந்து விட்டேன்!
ஆசை வந்த போது
நெஞ்சைஇழந்துவிட்டேன்!

ஞானம் வந்த போது
'நான்', இழந்து விட்டேன்!
என்னை இழந்த போது
எல்லாம் பெற்று விட்டேன்!

*இந்தக் கவிதையில் பயனளிக்கும் ஒவ்வொன்றும் கிடைக்கும் போது எதற்குப் பயனளிக்குமோ அதை இழந்து விட்டதாகக் கூறுகிறார் கவிஞர்.இவ்வாறு பலவற்றையும் இழக்க நேரிட்டும் 'நான்' எனும் ஒன்றை இழக்க எல்லாமே கிடைப்பதாகக் கூறுகிறார். இது ஓர் முரண் உத்தியாகும். இக்கருத்தாடல் உத்தியை இராஜேந்தர் திட்டமிட்டே பயன்படுத்துகிறார். அதற்கு அவரது மற்றொருப் பாடல் சான்றாகும்.*

தண்ணீரிலே மீன் அழுதால்
கண்ணீரைத்தான் யார் அறிவார்
தனிமையிலே நீ அழுதால்
உன்னுணர்வை யார் அறிவார்.

*ஒவ்வொரு மொழியின் தொடரும் வாக்கியமும் ஒரு குறிப்பிட்ட அமைப்பைக் கொண்டிருக்கும். ஆங்கிலத்தைப் பொறுத்தவரை எழுவாய், பயனிலை செயப்படுப்பொருள் என்று வருவதுதான் இயல்பு.*

| | | | |
|---|---|---|---|
| *(எ.கா)* | Ravi | Beat | Gopi |
| | ↓ | ↓ | ↓ |
| | Subject | verb | Object |

*தமிழ் மொழி வாக்கியம் எழுவாய் செயப்படுப் பொருள் பயனிலை என்றே அமையும்.*

இரவி கோபியை அடித்தான்

  

எழுவாய் செயப்படுப்பொருள் பயனிலை

இவ்வமைப்பில் செய்யப்படும் மாற்றம் மொழிக்கு இலக்கியப் பண்பை ஏற்றித் தருகிறது.

கண்டனன் கற்பினுக்கினியைக் கண்களால்

என்ற கம்பராமாயண அடியும்

நிற்குமோ ஆவி நிலைக்குமோ நெஞ்சம்
மணம் பெறுமோ வாழ்வே

என்ற கண்ணதாசனின் பாடலும் தமிழ் இலக்கண அமைப்பு மாறி இலக்கிய பண்பை ஏற்றித் தருவதற்குச் சான்றுகளாகும்.

நடைமுறைக் கருத்தாடலில் உயர்திணை அஃறிணை என்ற இலக்கண வேறுபாட்டை நாம் பின்பற்றுகிறோம் ஆனால் இலக்கியக் கருத்தாடலில் பருப்பொருள்களின் பண்புகளை நுண்பொருள் களுக்கும் ஏற்றிக் கொடுப்பதால் கவித்துவம் பெறுவதைக் காணலாம். பாவேந்தர் பாரதிதாசனைப் போற்றிப்பாடும் தமிழன்பன் கவிதை இதற்குச் சான்றாகும்.

இங்கே
சிலரது சிந்தனைகள்
கற்பிற்
சிறந்தவை
எவரையும் தொடுவதில்லை
சிலரது சிந்தனைகள் அவர்
வாழும்போதே
பூவோடு பொட்டோடும்
போய்ச் சேர்ந்துவிடும்

இன்னும்
சிலரது சிந்தனைகளோ
அவர் இறந்தவுடன்
தவறாது
உடன்கட்டை ஏறிவிடும்

புரட்சிக் கவிஞனே —உன்

சிந்தனைகள் – நீ
போனபின்னும்
செல்லுபடியாகும்
வாக்குமுறிச் சீட்டுகள்!

*'தளபதி' திரைப்படப் பாடல் ஒன்றில்*

என் நண்பன் போட்ட சோறு நிதமும் தின்னேன் பாரு
*நட்பைக் கூட கற்பைப்* போல எண்ணுவேன்

*என்ற அடிகள் இடம்பெறுகின்றன. காலங்காலமாகக் 'கற்பு' என்னும் சொல்லுக்கு ஓர் ஆழமான பொருள் நம் சமூகத்தில் நிலவி வருகிறது.அது ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமிடையேயான உறவின் பாற்பட்டது என்ற கருத்தும் நிலவி வருகிறது.இந்நிலையில் இரண்டு ஆண்களுக்கு இடையேயான நட்பு பற்றிக்கூறும்போது அந்நட்பின் வலிமைக்குக் கற்பின் பண்பு ஏற்றப்பட்டுப் பாடலாக்கப்படும்போது அந்த அடிகள் மிக ஆழமான பொருளைக் கவித்துவத்துடன் புலப்படுத்த உதவுகின்றன.*

*புதுக்கவிதையில் (சித்திரக்கவி என்று சொல்வது போல) சொல்லோ தொடரோ வாக்கியத்தில் இயல்பாக அமையும் முறையிலன்றிக் கவிதையில் இடம் பெறும் சொல்லின் பொருளுக்கு ஏற்ப அமைவதும் குறிப்பிடத்தக்கதாகும்.*

கிறுக்கல் வாழ்க்கையில்
ச
று
க்
கி
ய
எங்களின்
விதிக்கோடுகளை
யார் தான்
ஓவியமாக்கப்
போகிறார்கள்!

*என்ற கவிதை வாழ்க்கை மனவுணர்வு சறுக்கியுள்ளதைக் காட்டுகிறது.*

வெல்வட் மெத்தையில்
கோரைப்பாயில்

கட்டாந் தரையில்
நா லு
பே ர்
தோள் தாங்கும்
பச்சை மூங்கில் பாயில்

என்னும் கவிதையில் மூங்கில் பாடையின் நான்கு முனைகளை நான்குபேர் பிடித்துத் தூக்கிச் செல்லும் காட்சியினை 'நாலு பேர்' என்ற சொல்லை வடிவமைத்ததின் மூலம் கவிஞர் காட்டியுள்ளார்.

நடக்க இயலாதனவற்றைத் தொகுத்துக் கூறுவதும் கவிதைக் கருத்தாடலில் ஒரு உத்தியாக உள்ளது.

சாவே உனக்கொரு நாள்
சாவு வந்து சேராதோ ?
சஞ்சலமே நீயுமொரு
சஞ்சலத்தைக் காணோயோ ?
தீயே உனக்கொரு நாள்
தீ மூட்டிப் பாராமோ ?
தெய்வமே உன்னையும் நாம்
தேம்பி அழ வையோமோ ?

என்ற பாடலில் ஒவ்வொன்றும் நடக்க இயலாதனவாகவே அமைந்து கவிதைக்கு சிறப்பூட்டுகின்றன. சாவுக்குச் சாவு எது? தீக்கு எப்படி தீ மூட்டுவது என்ற பொருள் விலகல்தான் கவிதைத் தன்மையைத் தருகிறது. ஒரு நிலையில் இது பொருள் விலகல்தான். இதுவே கவிதைக்குக் கவித்துவத்தைத் தருகிறது. இங்கு அகநிலைச் செயப்படு பொருளாகப் (Cognitive Verb: எ.கா.சிரித்த சிரிப்பு; இப்பாடலில் சாவுக்குச் சாவு, சஞ்சலத்துக்கு சஞ்சலம், தீக்கு தீ) பயன்படுத்தியதன் மூலமே பொருள் அழுத்தம் பெறுகிறது.

இது போன்றே வைரமுத்துவின் சின்ன சின்ன ஆசை பாடலும் அமைந்துள்ளது.

சின்ன சின்ன ஆசை சிறகடிக்க ஆசை
முத்து முத்து ஆசை முடிந்து வைக்க ஆசை
வெண்ணிலவு தொட்டு முத்தமிட ஆசை
என்னை இந்த பூமி சுற்றி வர ஆசை
வானவில்லைக் கொஞ்சம் வளைத்துவிட ஆசை
பனித்துளிக்குள் நானும் படுத்துக் கொள்ள அசை
கார்குழலில் உலகைக் கட்டிவிட ஆசை

என்று எழுதியுள்ளார் வைரமுத்து. இவையெல்லாம் "சின்ன ஆசைகளா?" என்ற உணர்விலேதான் கவித்துவம் நுகர்பவனுக்குப் பரிமாறப்படுகிறது. இவ்வுத்தியின் வெற்றி அதே போன்ற மற்றொரு பாடலைப் பின்வருமாறு உருவாக்குகிறது.

பூப்பூக்கும் ஓசை அதை கேட்கத்தான் ஆசை
புல் விரியும் ஓசை அதைக் கேட்கத்தான் ஆசை..........

மரபுவழிபட்ட யாப்பு, அணி ஆகிய இலக்கணங்களின் துணை இருப்பினும் அவற்றுடன் வேறுசில கருத்தாடல் உத்திகளும் இணையும் போது ஆழமான கவித்துவம் நிறைந்த படைப்புகள் நமக்குக் கிடைக்கும் என்பதை நாம் மேலே கண்ட எடுத்துக்காட்டுகள் நமக்குப் புலப்படுத்துகின்றன. கருத்தாடல் உத்திகளை மேலும் மேலும் கண்டறிய படைப்புகள் எண்ணிக்கையும் கூடும் என்பதில் ஐயமில்லை.

# உலகமயமாக்கலும் தமிழ்க்கவிஞர் எதிர்வினையும்

*சா. பாலுசாமி*

*"உலகமயமாக்கல் மனிதர்களின் அடையாளங்களை மாற்றியுள்ளது. சமூக உறவுகளில் காணப்படுகின்ற பிரச்சனைகளைத் தீவிரமாக்கியுள்ளது. உலகமயமாக்கலுக்கும் இனத்துவ அடையாளத்திற்கும் இடையே நடக்கும் போராட்டம்தான் 21ஆம் நூற்றாண்டின் மிகப்பெரிய சவால்"*

*(கலாநிதி கா.சிவத்தம்பி, நேர்காணல், தினமணிக் கதிர், 8.6.97)*

மேற்காணும் பேராசிரியர் கா.சிவத்தம்பியவர்களின் கூற்று ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய பல வினாக்களை எழுப்புகின்றது. உலகமயமாக்கல் என்றால் என்ன? அதனை வழி நடத்துவோர் யாவர்? அதன் விளைவுகள் யாவை? உலக இனங்களின் அடையாள அழிவிற்கு அது எவ்வாறு காரணமாகிறது? தம் அடையாள மீட்புக்காகப் போராடும் இனங்களில் படைப்பாளிகளின் செயல்பாடுகள் எத்தகையதாக அமைய வேண்டும்? இவ்வினாக்களை ஒட்டிய கருத்துகளையும் இன்றைய தமிழ்க்கவிதைச் சூழலையும் இக்கட்டுரை முன்வைக்கிறது.

'உலகத்தை ஒரு கிராமமாக்குவது' என்ற முழக்கம் இன்று முன்வைக்கப்படுகிறது. இது வளர்ந்து வரும் இன்றைய அறிவியலின் முழக்கம் மட்டுமன்று; தகவல் தொடர்புச் சாதனங்களைப் பெருக்குவதன் மூலம் உலகத்தைக் கையளவாகச் சுருக்குதல் என்பது மட்டும் இதன் நோக்கமன்று; உலகத்தை ஒன்றுபடுத்துதல், ஒரே பண்பாட்டினதாகத் தரப்படுத்துதல் என்பனவெல்லாம் இன்று வளர்ந்த நாடுகள் முன்வைக்கும் இலக்குகளாக உள்ளன. இம்முயற்சி

இன்று செயல்வடிவம் பெற்று வருவதையும் அன்றாடம் உணரமுடிகிறது.

உலகச் சமுதாயத்தை ஒன்றாக்குவது என்பது அடிப்படையில் ஒரே வகையான பொருளாதாரத்தைக் கட்டமைப்பதன் மூலமே சாத்தியப்படும் ஒன்றாகும். இதற்கெனவே தடையற்ற பொருளாதாரக் கொள்கையான தாராளமயப்படுத்துதல் முன் வைக்கப்படுகிறது. இதன் மூலம் அமெரிக்கச் சந்தை, இந்தியச் சந்தை இரண்டும் ஒன்றுபட்டு ஒரே சந்தையாக உருமாறுகின்றன. ஆனால் நடைமுறையில் இதனுடைய விளைவுகள் இந்தியா போன்ற மூன்றாம் உலக நாடுகளுக்கு எதிராகவே அமைகின்றன. இந்நாடுகள் மேற்கு நாடுகளில் நுகர்பொருள் வணிகச் சந்தைகளாக மாற்றப்பட்டுள்ளன. அந்நாடுகளின் உற்பத்திப் பொருட்களே கீழை நாடுகளின் வீடுகளை அடைத்துக் கொண்டுள்ளன. குழந்தைகள் உண்ணும் சிறு இனிப்புப் பொருட்களிலிருந்து வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்கள், இயந்திரங்கள் என அனைத்தும் மேலை நாடுகளில் உற்பத்தி செய்யப் பெற்றனவாக ஆக்கப் பெற்றுள்ளன. தம் தேவைகளைத் தாமே உற்பத்தி செய்து கொள்ளுவதை இழப்பதுடன் உள்ளூர்த் தொழில்துறை நசிவடைந்து அழிகின்றது.

மேலை நாடுகளின் தேவைகளுக்கான பொருட்களை ஏற்றுமதி செய்யவேண்டிய கட்டாயம் காரணமாக, அந்நாடுகளின் தேவை நோக்கியே இங்கு உற்பத்தி செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. குறிப்பாக, இந்தியா போன்ற வேளாண்மை நாடுகளில் வேளாண்மை உற்பத்தி சுய தேவைகளின் நிறைவுக்கானவையாக இல்லாமல் ஏற்றுமதித் தேவைக்கானதாக மாற்றியமைக்கப்படுகிறது. தஞ்சை போன்ற நெற்களஞ்சியங்கள் கூட இறால் பண்ணைகளாக மாற்றப்பட்டு நில இயற்கை அழிவு ஏற்படுவது இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இதனால் இயற்கை அழிக்கப்படுகிறது. தொடர்ந்த வற்புறுத்தல்களால் நில இயற்கை திரிகிறது. சூழலுக்குத் தகுந்த உணவு உற்பத்தி முறை சிதைக்கப்பட்டுப் பணப்பயிர்கள் வளர்க்கப்படுகின்றன.

இத்தகைய நிலையின் காரணமாக மூன்றாம் உலக நாடுகளில் ஏற்படும் சீரழிவுகள் ஆழ்ந்த கவனத்திற்குரியனவாகும்.

> "பன்னாட்டு நிறுவனங்கள் மூலதனக் குவிப்பாலும், நவீனத் தொழில் நுட்பங்கள் மூலமாகவும் மூன்றாம் உலக நாடுகளின் குரல்வளையை நெறிக்கின்றன. ஏகபோகக் குத்தகையும், மூலதன ஏற்றுமதியும் அதன்

வழியான சுரண்டலும் தானே ஏகாதிபத்தியத்தின் இயல்புகள்! மலிவான விலைக்குக் கச்சாப் பொருட்கள், பெரியதொரு வியாபாரச் சந்தை மட்டுமல்லாமல், குறைந்த ஊதியத்திற்கு வேலை செய்யக்காத்திருக்கும் பெரிய தொழிலாள வர்க்கமும் மூன்றாம் உலக நாடுகளில் கிடைப்பதால், இங்கு மூலதனத்தைக் குவித்துக் கொள்ளை இலாபம் அடிக்க முயலுகின்றன."
(பிரிட்டோ, பீட்டர், சிங் (தொ.ஆ) *வேர்களைத் தேடி*, ப.30)

புதிய பொருளாதாரக் கொள்கை மூலம் இந்தியா வியாபாரச் சந்தையாதல், ஏகாதிபத்தியத்திற்கு உடன்படல், உழைப்புச் சுரண்டலுக்கு ஆட்படுதல் ஆகியனவற்றிற்கு உட்படுதலை உணரவியலுகிறது. மேலும் தனியார் முதலீடு எல்லாத்துறைகளிலும் ஊக்குவிக்கப்படுகிறது. தனிமனித இலாப நோக்கிற்கு மக்கள் பலியாக வேண்டியுள்ளது. நலிவுற்ற பொதுத்துறை நிறுவனங்கள் மூடப்படுகின்றன. அரசில் தாங்கள் ஓர் அங்கமென மக்கள் உணருதலும், உரிமையும் பாதுகாப்பும் பெறுதலும் இழக்கப் பெறுகிறது. இயந்திரங்களை நிறுவி, அவ்விடத்தில் தொழிலாளர்களை வெளியேற்றும் கொள்கை காரணமாக வேலை வாய்ப்பின்றிப் போகும் நிலை உருவாகிறது. கண்மூடித்தனமான ஏற்றுமதிக் கொள்கை காரணமாக, மக்கள் தங்களது உற்பத்திப் பொருட்களைத் தாங்கள் நுகர்வதிலிருந்து தடுக்கப்படுகின்றனர். 'அன்னியமாதல்' மன உணர்ச்சி உச்சநிலையை எட்டுகின்றது. இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் தளர்ச்சி காரணமாக, தடையற்றுப் பொருள்கள் குவிக்கப்படுகின்றன. தொடர்புச்சாதனங்கள் மூலம் பொருள் நுகர்வு, ஆடம்பர மனப்பான்மை தூண்டப்படுகிறது. பொருளே வாழ்வின் மதிப்பாகக் கருதும் மனநிலை உருவாக்கப்படுகின்றது. இது குறித்த முனைவர் எம். கங்காதரன் அவர்களின் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது:

"இன்றைய இந்தியாவின் நுகர்வோர் சமூகம் (Consumer Society) முற்றிலும் ஒரு நவகாலனியாதிக்கத்தின் அடிமை வர்க்கம்தான்... இந்தியாவின் சொந்தமான உற்பத்தி முறைகளும், உற்பத்தி அமைப்புகளும் பூரணமாகச் செயலிழந்து வருகின்றன. வேலை செய்யும் ஆற்றல் உடையவர்களில் பெரும்பாலோர் வேலை தேடி அலையும் நிலை அல்லது வேறுநாடுகளுக்கு உழைப்பை விற்கும் நிலை ஏற்பட்டுள்ளது...விளம்பரங்கள், விளம்பரத்தன்மை கொண்ட

திரைப்படங்கள் முதலானவை மூலம் மிகவும் கவரப்பட்டு, அவற்றினாலேயே உருவாக்கப்படும் ஒரு வாழ்வமைப்பு இங்கு உருவாகியுள்ளது. இன்றைய புதுக் காலனியாதிக்க நிலைமை முந்தைய பழைய பாணிக் காலனியாதிக்க நிலையை விடவும் ஆழமாகவும், முழுமையாகவும் நமது வாழ்வைப் பாதிக்கிறது. சில ஐரோப்பிய நாடுகளில் உண்டாகியுள்ள அபரிமிதமான 'வளர்ச்சி' யானது, இன்று வரை பூமிப் பரப்பிலெங்கும் உண்டாகாத விதத்திலான ஒரு செயற்கையான வாழ்வு முறையை உண்டு பண்ணி விட்டிருக்கிறது"

(எதிர்ப்பின் முகங்கள் **(கட்டுரை)**, *சுபமங்களா*, நவம். 1992)

இத்தகைய செயற்கையான வாழ்வுமுறை வலிந்து புகுத்தப் பெறும் ஒரு சமுதாயம் தனது இயல்பான அனைத்தையும் சிதைத்துக்கொள்கிறது; சிறிது சிறிதாக அழித்துக் கொள்கிறது. மக்களுக்கான அரசு என்பது மாறி, மக்களது வாழ்வியலைப் புரக்கும், வளர்க்கும் தன்மைகளை இழந்து, வெறும் பொருளாதார நிர்வாக நிறுவனமாக உருக் கொள்கிறது. இயற்கையான பாரம்பரியக் கலாச்சாரத்தின் மீது அன்னியக் கலாச்சாரப் படையெடுப்பு நேருகிறது. மொழியும், கலைகளும் உயர்ந்த தளத்தில் நிலவுவது அழிந்து வெகுசனக் கலாச்சாரம் முன்னிறுத்தப்படுகிறது.

"வெகுஜனக்கலாச்சாரம் உருவான பின் அது உயர் கலாச்சாரத்தை அழிக்கும் ... உயர் கலாச்சாரம் மார்க்கெட் உருவாக்கும் கலாச்சாரத்தோடு போட்டி போட வேண்டி வரும். மார்க்கெட்டுகளில் வெகுஜனக்கலாச்சாரமே மதிக்கப் பெறும். ஏனெனில் சந்தைக்கு வரும் நுகர்வோர் இதனை எளிதாய்ப் புரிந்து கொள்கிற விதமாக வெகுஜனக் கலாச்சாரம் உருவாக்கப்பட்டிருக்கும். உயர்கலாச்சாரம் நுகர்வோரின் ரசிப்புக்கு உதவாது. வெகுஜனக்கலாச்சாரமே அதிகம் விலைபோகும்"

(மேற்கோள், தமிழவன், *அமைப்பியல்வாதமும் தமிழ் இலக்கியமும்*)

என்று மாக்டனால்ட் அவர்கள் கூறுவது குறிப்பிடத்தக்கது. இத்தகைய கலாச்சார இழப்பும், வாழ்க்கை மதிப்பீட்டுச்சிதைவும் வாழ்வின் உண்மையான பொருண்மையிலிருந்து மக்களை அன்னியப்

படுத்துவதாகும். தங்களுக்குரிய அனைத்தையும் இழப்பதன் மூலமும், தமக்கு ஒவ்வாதவற்றை ஏற்பதன் மூலமுமே இன அடையாள இழப்பு நேர்கிறது.

# II

கலை என்பது சமுதாயத்தின் மனசாட்சியாகும்; மனதின் குரலாகும்; மனதின் குரல் என்பது ஆன்மாவின் குரலாகும். ஆதலால் அத்தகு கலைகளைப் படைக்கும் கலைஞன் சமுதாய ஓட்டத்தில் வாழ்கின்ற அதே வேளையில் அதனின்று விலகிநின்று, அதனைத் திறனாய்ந்து கருத்துரைப்பவனுமாவான். அத்தகைய பார்வையினைக் கொண்ட கலைஞனது படைப்பே முற்போக்கானதாகும்.

> "சமுதாயத்தின் அல்லது சமூக நிலைமையின் அல்லது சமூக வளர்ச்சிப் படிநிலையின் ஒரு படி நிலையிலிருந்து இன்னொரு படி நிலைக்கு, இருப்பதிலும் பார்க்க உயர்ந்தது என்று கருதப்படத்தக்க படிநிலைக்குச், செல்வதே முற்போக்கு என்று சொல்லத்தக்கதாகும்''.
> (கா. சிவத்தம்பி, *இலக்கியத்தில் முற்போக்குவாதம்*, ப.14)

ஆனால் மேலே குறிப்பிட்டவாறு நமது சமுதாயத்தின் பொருளாதார அடித்தளம் மாற்றியமைக்கப்படுவதால் கலைகள் தமது தனித் தன்மைகளை இழந்து வருகின்றன. இதுகுறித்து,

> "தொழில் நுட்பப் பண்பாடு நமது மண்ணில் பொதுவாகக் கலைகளுக்குக் கற்பித்துள்ள புனிதத் தன்மையை உடைத்தெறிகிறது. புராதன வழிபாட்டு ஆற்றல் கலையை விட்டு விலகிவிடுகிறது. இதனால் இன்றைய நவீன ஓவியன், தான் மேற்கொண்டு செல்ல வேண்டிய திசையறியாமல் திகைக்கிறான். அச்சுறுத்தப்பட்ட இந்திய ஓவியன், மேலை நாட்டு நவீன, அதிநவீனப் படைப்புகளைப் போன்ற போலிகளைத் தயாரிக்கத் தொடங்கி விடுகிறான். இந்தக் குறுக்குவழி அவனை வேர்களற்றவனாகவும், இரத்தச் சோகை பிடித்தவனாகவும் மாற்றி விடுகிறது. சர்வதேசியம் எனும் பெயரில் அவன் தனது அடையாளத்தை இழந்துவிடுகிறான். அவனது கலை, சுவையுணர்வற்ற தொழில் தேர்ச்சி சார்ந்த வெறும் விடுகதையாகி விடுகிறது."
> (*தற்காலக்கலை—அகமும் புறமும்*, ப.22)

என்று கவிஞர் இந்திரன் அவர்கள் குறிப்பிடுகிறார். ஓவியக்கலைக்குக் கூறப்பட்ட இக்கூற்று, அனைத்துக்கலைகளுக்கும் பொருந்து வதேயாகும்.

'சற்றும் மானுடத் தன்மையற்றதும், மானுட அடிப் படைகளையெல்லாம் ஒடுக்குவதும், நட்பு, பெருந்தன்மை, அன்பு, கருணை, ஒத்துழைப்பு முதலிய அடிப்படைகளைக்கூட நசுக்கி இல்லாமல் செய்வதுமான இந்தக் தாக்குதலுக்கு எதிராக எதிர்ப்புக் குரல்களும் உலகமெங்கும் எழுகின்றன. தமிழில் பல்வேறு கலை வடிவங்களிலும் இவ்வெதிர்ப்புக்குரல் பதிவாகிறது. புதுக் கவிதையிலும் தன்னடையாளம் தேடும் குரல்கள் பல்வேறு வடிவங்களில் முழங்குகின்றன.

தாய்மொழி என்பது ஓர் இனத்தின் அடிப்படை அடையாளமாகும். அதுவே பிற அடையாளங்களைத் தக்க வைத்துக் கொண்டிருப்பதும் வாழவைப்பதுமாகும். ஓர் இனத்தின் 'உரிமைச் செம்பயிருக்கு வேராக' இருப்பதும் தாய்மொழியே. தமிழகத்தில் இன்று தாய்மொழி எல்லா நிலைகளிலும் புறக்கணிப்புக்கு ஆளாகின்ற போது அதனை எதிர்த்துக் கவிஞர்கள் உரத்த குரலில் எதிர்ப்பினைத் தெரிவிக்கின்றனர். முந்தைய காலங்களைப் போலவே தமிழ்மொழி ஆதரவுக் குரல், தாய்மொழிவழிக்கல்வி ஆதரவுக்குரல், கவிதையில் ஒலிக்கிறது. பாவலரேறு பெருஞ்சித்திரனார், உணர்ச்சிக்கவிஞர் காசியானந்தன், தமிழன்பன் முதலியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கோராவர்.

கவிஞர் பழமலை தாய்மொழிவழிக் கல்விக்காகத் தொடர்ந்து கவிதைகளைப்படைத்து வருகின்றார். அத்துடன் உலக மயமாக்கத்தினால் தன் பொருளியலின் இயற்கை இயல்புகளைத் தமிழகம் இழந்து வருவதைப் படைத்துக் காட்டி எச்சரிக்கை செய்கிறார். தட்டைப் பயிறு, கடலை, இலந்தை, பீர்க்கு, கீரைகள், வரகு, மொச்சை முதலியன விளைந்த காலங்களையும் அவற்றை உருவாக்கியவர்களின் வாழ்விலிருந்த நிறைவையும் கூறி,

"பஸ்ஸை எங்களூரில் 'கார்' என்பார்கள்
ஊரே போவது, வருவது காரில்தான்'
குறுக்கே பாலம், கரும்புச் சாலை,
டிராக்டர், டிரெய்லர்,
மின்சாரம், மோட்டார் — என்று வந்துவிட்டன...
துவரம் பொட்டு, கடலைக்கொடி,

சோளத்தட்டை — மாடுகள் தின்னும்.
வறுத்த பயறு, பொரித்த சோளம்,
எள் உருண்டை — என்றெல்லாம் செய்வாள் அம்மா.
புஞ்செய்க்காடு;
மக்களுக்குப் போலவே ஆடு மாடுகளுக்கும்
சுவைகள் பயிற்றிய திறந்த வெளி அரங்கு.

'பணப் பயிர்தான்' பயிர் என்பவர்கள்—
காசை விதைக்கலாம்.
நோட்டை நடலாம்.
இன்று மனங்களைப் போலவே
எங்கள் மண்ணும் சலிக்கும்.
நெல் ஒரு பயிர்
கரும்பு ஒரு பயிர்
நிலம் முழுக்கவுமா இதே பயிர்? இதே பயிர்?
(பச்சைப் பாலைவனம், *தினமணி*, பொங்கல்மலர் '96)

என்று உரைப்பதன் மூலம் இன்று பணத்திற்காக வாழ்வது எனச் சமுதாய அமைப்பு மாற்றப்படுவதை ஆதங்கத்துடன் படைத்துக் காட்டுகிறார்.

வேளாண் சமுதாயத்தில் உழைப்பும் வாழ்வும் வேறுபடாமல் இருந்த நிலையையும், அதன் இனிமையையும் இழந்து இன்று தொழிற்சாலையில் கூலியாகும் ஒருவனது தவிப்பை மகுடேசுவரனது இக் கவிதை ஆழ்ந்த குரலில் துயரத்துடன் வெளிப்படுத்துகிறது:

கதிர் பிடித்த கழனியின்
புல்லடர்ந்த வரப்பில் நிற்க வைத்து
என்னைக் குருவி விரட்டப் பணியுங்கள்.
ஓடிஓடிச் செய்வேன்.

ஆட்டு மந்தை காட்டி
குளிப்பாட்டி வரச் சொல்லுங்கள்.
குட்டியொன்றைத் தோள்போட்டு
ஓடைக்கு ஓட்டிப் போவேன்.

எருமைகளடைக்கும்
கொட்டிக்குக் கூட்டிப் போங்கள்.
கன்றுகளின் சம்மதத்தோடு

உங்கள் பாற்குடங்களை நிரப்பிவிட்டு
சாணியள்ளக் கூடையெடுப்பேன்.

அந்த மாநிழலில் கிடக்கும் கட்டைகளை
விறகுக்குடைக்க ஏவுங்கள்.
பிளந்து கட்டுவேன்.

சோடி எருதுகளும் கலப்பையும்
கொடுங்கள்.
அறுவடைக்குச் சொல்லியனுப்புவேன்.

அதை விடுத்தென்னைக்
கொதிகாற்றலையும் ஆலைக்கு
கூலிக்கு ஓடச் சொல்கிறீர்களே".

(*பூக்கள் பற்றிய தகவல்கள்*, ப.19)

இன்று பெருந்தொழில்கள் பெருகுவதால் உருவாகின்ற நகர்புறப் பெருக்கமும் சுற்றுச்சூழல் அழிவும் தமிழ்க் கவிஞர் பலரின் படைப்புப் பொருளாகியுள்ளது. 'உலக வளத்தையே உறிஞ்சிப் பிழைக்கும் வல்லரசுகளின் கொடூரமான சுரண்டல் முகத்தைத் தன் படைப்பாக்கப் பொருளாகத் தேர்ந்தெடுக்கும் போது தான் கலைஞன் 'படைப்பாளி' என்கிற தளத்தை அடைகிறான்' என்கிறார் முனைவர் பஞ்சு அவர்கள்.

(முன்னுரை, *வானம் பிறந்தது*. ப. 10)

"கதைகள் சொல்லி மகிழக் கிளைகள் தந்த
புளியமரமும் உனக்கில்லாமல் போகலாம்.
ஓடித்திரிந்த வயல்வரப்பும், அதன் மேல்
தழலாய்ப் பூப்பூக்கும் முருங்க மரமும்
வீட்டுமனைகளாய் வெறித்திருக்கும்.

முல்லைநிலக்குன்றுகள்
தாருக்கடியிலும் தண்டவாளத்திற்கடியிலும்
கிடக்க
குறிஞ்சி, தேயிலையால் தேய்ந்துபோக
நெய்தல், பணக்காரனின் விடுமுறை வீடுகளாக
மருதம் பயிரும் வரப்புமிழந்து
சாலைகளுடனும் நட்டு வைத்த கருங்கற்களுடனும்
நகர்களாக
நீ பாலையை மட்டுமே பார்க்க வேண்டியிருக்கும்.

(வானம் பிறந்தது, ப.16)

என்று தன் மகனை நோக்கிக் கூறும் கவிஞர் து.நரசிம்மனின் கவிதை இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

இத்தகைய உள்ளடக்கங்கள் மட்டுமன்றி உணர்த்தும் முறையிலும் தமிழ்ப் பண்பாடு, மொழி சார்ந்து கவிதைகளைப் படைக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. சங்க இலக்கியத்தில் உரிப்பொருளை விளக்க எவ்வாறு அதன் முதற்பொருள் சார்ந்த கருப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டனவோ அது போலவே இன்றும் தமிழ் வாழ்க்கையை, அதன் இன்றைய சிக்கல்களை, தற்கால மனிதனது உணர்வுகளைச் சித்திரிப்பதில் தமிழ் சார்ந்த சொற்கள், பொருள்கள், உவமைகள், உணர்த்தும் முறைகள் கைக்கொள்ளப் பெறுகின்றன. இவ்வகையில் இன்குலாப், சிற்பி, இலக்குமிகுமாரன் ஞானதிரவியம், வித்யாஷங்கர் முதலியோரின் படைப்புகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாகும்.

## III

மாறுதல் என்பதும் மாறுவதன் மூலம் வளருதல் என்பதும் இயக்கவியலின் சரியான விதிமுறையாகும். இவ்வடிப்படையில் வளர்ந்து வரும் விஞ்ஞான அறிவு, புதிய கண்டுபிடிப்புகள் பயன் கொள்ளப் பெறவேண்டும் என்பதில் இருவேறு கருத்துகள் இருக்கவியலாது. ஆனால், மாற்றமும் வளர்ச்சியும் சுயசார்பு டையதாகவும் அந்தந்த மக்கள் தொகுதியின் தேவைகளுக்கேற்றதாகவும் உள்ளிருந்து எழுதல் வேண்டும். அன்னியமானவை ஏற்கப்படும் போது அவை இனத்தின் அடிப்படைத் தன்மைகளை மாற்றாததாகவும் விழுமியங்களை அழிக்காததாகவும் இருத்தல் வேண்டும். தன்னல நோக்கத்தோடு புகுத்தப் படுவனவற்றைக் கண்டறிந்து எதிர்க்காவிடில் அது தற்கொலைக்கு ஒப்பானதாகும்.

நமது மரபுசார்ந்த கலாச்சாரங்களை, விழுமியங்களை ஏற்பது என்பது பழைமையை எந்தவொரு விமர்சனமுமற்று ஏற்பது என்பதாகாது. எந்தவொரு சமுதாயமும் தன்னைத் தான் ஆய்வுக்கு உட்படுத்தி, தள்ள வேண்டியவற்றைத் தள்ளாவிடில் வளர்ச்சியற்று மடியும். நமது பண்பாட்டில் ஒவ்வாத கருத்துகளிருப்பின் அதனைப் புறந்தள்ளும் துணிவு வேண்டும். 'அப்பன் வெட்டிய கிணறு என்பதற்காக உப்புத் தண்ணீரைக் குடிக்கும்' மூடத்தனம் தேவையற்றதாகும். பெண்ணடிமைத்தனம், வருணாசிரமம், மூட

நம்பிக்கைகள், சாதியம் போன்ற எண்ணற்ற கொடுமைகள் எந்தவொரு காரணத்தால் நேர்ந்ததெனினும் அது எதிர்க்கப்பட வேண்டும்.

'மனிதனது வாழ்க்கை, மனிதத்துவத்தின் பூரணத்துவத்தை வெளிக்கொணருவதற்கான ஒரு பயணம்' என்பர். அம்மனிதத் துவத்தை மீட்டெடுப்பதும் இழக்காமல் காப்பதுமே இன்றைய படைப்பாளி செய்யவேண்டிய பெரும்பணியாகும். அவ்வாறில்லாமல் நமது சமகாலம் படைக்கப் பெற்று விடுமானால் அறிஞர் ஒக்ககூரா காக்குஜோ எச்சரிக்கை செய்வதுபோல் "இறந்த காலம் நம் நாகரிகத்தின் வறுமைக்காகப் பரிதாபத்தோடு நம்மைப் பார்க்கும்; வருங்காலமோ கலையில் நாம் எய்தியுள்ள மலட்டுத்தனத்திற்காகச் சிரிக்கும்." (பேரா. அ. பெருமாள், (மொ.ஆ), தேனீர்க்கலை, ப. 82)

# திருத்தப்படவேண்டிய தமிழ்–திரவிட– வடமொழி அகராதிகள்

*கு. இராசேந்திரன்*

*ஒரு மொழியின் உண்மையான வரலாற்றை அறியும் கருவி நூல்களில் அவ்வம் மொழியின் அகராதிகள் முதன்மையிடம் பெறுவன எனலாம். காலப்போக்கில் ஏற்படும் ஆய்வு வளர்ச்சிக்கேற்ப, ஒவ்வொரு மொழி அகராதியும் கொள்ளுவனவற்றைக் கொண்டு தள்ளுவன வற்றைத் தள்ளிக் கருத்துச் செப்பம் உடையனவாக மிளிர வேண்டும். இப்பெரும் பணியை, ஒவ்வொரு மொழியையும் சார்ந்த அறிஞர்கள், தம்தம் மொழி அகராதியுள், சிறிதும் தயங்காமல் செய்தாகல் வேண்டும். இவ்வகையில் தமிழ்மொழி அகராதியிலும், திரவிட மொழிகளின் அகராதிகளிலும், வடமொழியாகிய சமற்கிருத மொழி அகராதியிலும் உடனடியாக மேற்கொள்ள வேண்டிய செய்திகளுள் ஒன்றினைமட்டும் இக்கட்டுரை காட்ட விழைகின்றது.*

*எம்மொழி அகராதியிலும் இடம்பெறுகின்ற சொற்களுக்குப் பொருள் விளக்கம் செய்கின்ற பணிக்குமுன், அச்சொற்களின் உண்மை வரலாற்றைச் சுருக்கமாகவேனும் விளக்கிக்காட்ட வேண்டும். அவ்வகையில், சொற்களின் வரலாற்றை விளக்கும்போது, நாம் சுட்டும் இம்மொழிகளின் அகராதிகளில், பெருத்த பிழையான, பொய்மையான வரலாறு எழுதப்பட்டுள்ளது. இவற்றையே உடனடியாகத் திருத்த வேண்டுமெனக் கேட்டுக்கொள்கின்றோம். இக்கருத்தை விரிவாக விளக்க வேண்டுமாயினும், இடமும் காலமும் இன்மை கருதி ஒரேயொரு சொல் பற்றி மட்டும் உரைத்து, இக்கட்டுரையை நிறைவு செய்வோம்.*

## கண்டகம்

*தமிழ், திரவிட மொழி அகராதிகளிலும் வடமொழி அகராதியிலும் இடம் பெற்ற சொற்களுள், 'கண்டகம்' என்பது ஒன்று. இச்சொல்லின் வராலற்றைச் சொல்லும் போது, தமிழ் அகராதிகள்*

உட்பட யாவும் இச்சொல்லைச் சமற்கிருதச் சொல் என்பதாகவே காட்டியுள்ளன.

"கண்டகம், Kantakam, n< Kantaka:

1. Thorn: முள்; 2. நீர் முள்ளி;
3. காடு; 4. உடைவாள்;
5 வாள்; 6. கொடுமை.

இது, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியின் விளக்கம்.

"Kantakamu, (SKT), n.: A thorn/ Prickle
A pest, Evil, Inconvenience, Beastly sin, stumblingblock"

இது, Brown என்பார் வரைந்த தெலுங்கு அகராதியின் விளக்கம்.

"Kandagam, n: s
1. A thorn 2. Dangerous
3. A most inauspicious".

இது குண்டர்ட்டு என்பார் எழுதிய மலையாள அகராதியின் விளக்கம்.

"Kantaka, (SKT),n:
1. A thorn,: the point of a needle or pin
2. The erection of the hair of the body in thrilling emotions;
3. A troublesome Person; A foe"

இது, கிட்டல் என்பார் தொகுத்த கன்னட மொழி அகராதியின் விளக்கம்.

"Kanda, N: (From Kan)
A bulbous or tuberous root, A bulb"

இது, மானியர் வில்லியம்சு வரைந்த சமற்கிருத வேர்ச்சொல் அகராதி தரும் விளக்கம்.

திரவிட மொழி வேர்ச்சொல் அகராதி வரைந்த பர்ரோவும் எமனோவும், இக் கண்டகம் என்னும் சொல்லைத் தம் அகராதியில் சேர்க்கவில்லை. இதற்குக் காரணம் இவர்கள், இச்சொல்லை வடசொல்லாகக் கருதி விட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

## கண்டகம் தூய தமிழ்ச் சொல்லே

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், வடமொழி ஆகிய அகராதிகளில் சமற்கிருதச் சொல் எனக் குறிக்கப்பட்ட இக்கண்டகம்,

உண்மையில் ஒரு தமிழ்ச் சொல்லேயாகும். கண்டகம் எனப்படும் இச்சொல்லோடு ஒலியாலும் பொருளாலும் உறவுடைய பிற தமிழ்ச் சொற்கள், கண்டம், கண்டல் என்பவனவாகும். கண்டம், கண்டகம், கண்டல் எனப்படும் இம் மூன்று சொல்லிற்கும் உரிய சொல்மூலமும் பொருள்மூலமும் ஒன்றே; 'கல்' என்பது சொல்மூலமும், 'கூட்டம்' என்பது பொருள் மூலமும் ஆகும்.

தமிழின் மூலச்சொற்களுள் "கல்" என்பதும் ஒன்று.இக் 'கல்' என்னும் மூலத்திற்குக் கூட்டம், திரட்சி என்பன மூலப் பொருள் களாகும். கல்—கல் + து— கற்று—கற்றை—கத்தை; கல்—கன்—கன்னம்; கல்—கள்—கள் + து—கட்டு; கல்—கள்—களம்; கல்—கள் கண்—கணை (கணைக்கால்) என்பவனாக, இக் "கல்" என்பதினின்று பல்கும் சொற்கள் யாவும் கூட்டமானது, திரண்டது, திரளுதற்குரியது என்ற பொருள்பட்ட தூய தமிழ்ச் சொற்களேயாகும். இன்னும் கல்—கள்—கள் து—கண்டு (நூற்கண்டு) போன்றதும், திரண்டது என்னும் பொருளே என்பதற்கு எடுத்துக்காட்டு ஆகும்.

"கல்" என்னும் கூட்ட மூலப்பொருளிலிருந்து கூர்மைப் பொருள்களின் மூலம் பிறக்கின்றது என்னும் உண்மையை; இங்கு நாம் விளக்கியாக வேண்டும். ஒரு பொருளை வேறொரு பொருளுடன் கூட்டி நெருக்கும்பொழுது மட்டுமே, கூர்மைத்தன்மையை ஒரு பொருள் பெற முடியும்; அல்லாத பொழுது, கூர்மையாதல் நிகழவே நிகழாது. இவ் வடிப்படையிலேயே, 'கல்' என்னும் கூட்ட மூலம் மூன்று நிலைகளில் கூர்மைப் பொருள்தரும் சொற்களைத் தமிழில் தோற்றியுள்ளது.

கல்—கற்—கர்—கரு—கருக்கு (கூர்மையானது)

கல்—கற்—கர்—கரு—கருவி (கூரியது)

என்பன முதல் வகை விரியாகும்.

கல்—கள்—களு—கழு (கூரிய கொலைக்கருவி)

என்பது, இரண்டாம் வகை விரியாகும்.

கல்—கள்—கள் + து—கண்டு—கண்டல்

கல்—கள்—கள் + து—கண்டு—கண்டம்

கல்—கள்—கள் + து—கண்டு—கண்டகம்

என்பன, மூன்றாம் வகை விரியாகும்.

"கண்டல்" என்னும் சொல் நீர்முள்ளியையும் தாழையையும், சங்க இலக்கியங்களில் குறிப்பதைக் காண்கின்றோம். கண்டங்கத்திரி என்னுமிடத்து, முள் உள்ள கத்திரிவகைச் செடியைக் குறிப்பது

காண்கின்றோம், கண்டகம் என்பது, முள், நீர்முள்ளி, வாள், எனப் பொருளாகும்போது, கூர்மைப் பொருளைக் காண்கின்றோம்.

சங்ககாலப் பெருஞ்சித்திரனார், பலாக்கனியை, "முட்புற முதுகனி" (புறம். 158, 23) என்று உரைப்பார். கன்னடத்திலும் தெலுங்கிலும், கண்டபலா என்று முட்பலாவைக் குறிக்கும் சொல் வழங்குவது, இவண் எண்ணத்தக்கது. சிங்கள மொழியில், விரலில் இருக்கும் கூர்மையான உகிர் (நகம்) 'கரகண்டகா' (Kara-Kantakas) என அழைக்கப்பட்டு அதுவும் சமற்கிருதச் சொல் எனப்பதிவாகியுள்ளது. கல் என்னும் மூலத்திலிருந்து கரு, கருக்கு, கருவி எனப்பட்ட முதல்வகைச் சொற்களும்; கழு எனப்பட்ட இரண்டாம் வகைச் சொற்களும்; கண்டல், கண்டம், கண்டகம் எனப்பட்ட மூன்றாம் வகைச் சொற்களும், பலப்பல திரிபு வடிவங்களில், திரவிட மொழிகளிலும், சமற்கிருதத்திலும், சிங்களம் போன்ற மொழியிலும், பலப்பல சொற்களாக வழங்கப்பெற்று வருகின்றன. நமக்கு உள்ள ஒரே, கவலை, தமிழ் அகராதி உட்பட அனைத்திலும், இக் 'கண்டகம்' எனப்படும் சொல் வடசொல் என, வரலாறு திரித்துக் குறிக்கப்படுகின்றதே என்பதேயாகும். 'Thorn' என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு, ஒத்துப் போகாதவன் என்னும் பொருள் (Piercer) வழங்குவதும் இவண் ஒப்பு நோக்கத்தக்கது. 'வயிர்' என்னும் கூர்மைப் பொருட் சொல்லிலிருந்து 'வயிரி' எனப் பகையாளன் சுட்டப்படுவதும் "கண்டகம்" என்னும் கூர்மை பொருட்சொல்லிலிருந்து "கண்டக" (பகைவர்) என்னும் சொல் தமிழிலும் வடமொழியிலும் வழங்கப் பெறுவதையெல்லாம், இங்கு இணைத்து எண்ணவேண்டும்.

தமிழின் வரலாறும் தமிழனின் வரலாறும், கடந்த இரண்டாயிரம் ஆண்டுகட்டு மேலாகச் சமற்கிருதம் எனப்படும் அரைச்செயற்கை ஆரிய மொழியாலும், அம்மொழி கொண்டு தம்மை உயர்ந்தவர்களாகக் காட்டிக் கொண்ட சூழ்ச்சிமிகு ஆரியராலும் மிதிக்கப்பட்டும் சிதைக்கப்பட்டும்போன உண்மை வரலாற்று நிகழ்வுகளே, அகராதிகளில் நிகழ்ந்த குளறுபடிகட்கும் காரணமாகும். உலக வரலாற்றில், தமிழினம் தலைதூக்கிக்கொண்டுவரும் இவ்வேளையில், தமிழின் உண்மையான வரலாற்றை நடுநிலையோடு ஆராய்ந்து வெளிப்படுத்தவேண்டுவது மிகமிக இன்றியமையாப் பணியாகும். இப்பணி நோக்கி விரைவோமாக.